॥ श्रीः ॥

धन्वन्तरये नमः

# உணவும் பானமும்

நலமிக்க வாழ்க்கை முறை -2

## स्वस्थचर्या - २

भवाम शरदः शतम्

சி.வே. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி

# ஸமர்ப்பணம்

''உணவும் பானமும்'' என்ற இந்நூல் ''நலமிக்க வாழ்க்கை முறை'' என்று முன் வெளியிட்டுள்ள நூலின் இரண்டாம் பாகமாகும்.

பாரததேசம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வாழ்க்கை முறையில் பின்பற்ற வேண்டிய பல நெறிகளைக் கண்டறிந்து தொகுத்து, அதன்படி சுயக் கட்டுப்பாட்டுடன் வாழ்ந்து தனக்கெனத் தனித்த பழக்க வழக்கங்களை வாழ்வின் எல்லாத் துறைகளிலும் அமைத்துக் கொண்டுள்ளது. பாரதத்தின் அனைத்து மொழிகளிலும் இதற்கான நன்னெறி நூல்கள் உண்டு. தமிழில் ஆசாரக் கோவை முதலிய நூல்கள் உள்ளன. அந்த நன்னெறி நூல்களில் குறிப்பிட்டதனைத்தையும் ஒட்டி வாழ்ந்த நன்மக்கள் மிகச்சீரிய ஆரோக்கியம் ததும்புகிற நல்வாழ்க்கை பெற்று வந்துள்ளனர். இன்றைய சமுதாயம் பல்வேறு வெளிநாடுகளின் பழக்க வழக்கங்களின் சீறிப்பாய்கிற தாக்குதலுக்கு ஆளாகிப் பாரதப் பண்பாட்டைத் தனித்துக் காக்க இயலாத சூழ்நிலையில் குழப்பத்தில் உள்ளது. தன்னெறியில் நிற்க, கடந்த காலத்தின் நடைமுறைகளையும் அவற்றின் பின்புலனாக அமைந்த விஞ்ஞானக் கண்ணோட்டத்தையும் உணர்வது இன்றியமையாததாகின்றது. அந்த நோக்கில் அமைந்தவையே "**நலமிக்க வாழ்க்கை முறை**" என்ற தலைப்பில் வந்துள்ள இரு நூல்களும்.

*1938 - 1943* - ஆண்டுகளில் ஆயுர்வேதம் கற்க மைலாப்பூரில் உள்ள ஸ்ரீ வேங்கடரமண ஆயுர்வேதக் கல்லூரியில் சேர்ந்தேன். தேர்வுக்குரிய பாடங்களைப் புகட்டுவதுடன் நில்லாமல் பாரதீயப் பண்பாட்டின் விரிந்த அறிவாற்றலின் நிலைக்களன்களாக விளங்கிய பல தரிசனங்களின் ஆய்வுக் கோணங்களுடன் ஒட்டிய ஆயர்வேத தரிசனத்தின் அடிப்படைத் தத்துவங்களை என்னுள் ஆழப்பதித்த பேராசிரியர்கள் என் அறிவாற்றலை வளர்த்தவர்கள். புகழுடம்புடன் விளங்குகிற ஸ்ரீ K.G. நடேச சாஸ்த்ரிகள், ஸ்ரீ N.V. க்ருஷ்ணவாரியர், ஸ்ரீ V.S.வேங்கட ஸுப்ரமணிய சாஸ்த்ரிகள், ஸ்ரீ S.விசுவநாதசர்மா, என்ற ஆயுர்வேதப் பேராசிரியர்கள்.

அவர்களுள் சென்ற 1995 வரை எனக்கு வழிகாட்டியும் ஆயுர்வேதத்தின் எனது ஆதி குருவும், வேதாந்தம், வியாகரணம், ஆயுர்வேதம் என்ற மூன்றிலும் கரை கண்டவரும், ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்ததியர்களான ஜகத்குரு ஸ்ரீ மஹாபெரியவர்கள் ஜகத் குரு பெரியவர்கள் இவர்களின் மதிப்பு மிக்க பேரருளுக்குப் பாத்திரமாகி, ஸ்ரீ மடத்திலேயே பல ஆண்டுகள் வைத்யராகவும் ப்ரதான வித்வானாகவும் விளங்கிய ஸ்ரீ வேங்கட ஸுப்ரமணிய சாஸ்த்ரிகள் அவர்கள் என்னிடம் காட்டிய சிஷ்ய வாத்ஸல்யம் அளவு கடந்தது. அவர்களுக்கு எவ்வகையில் நன்றி கூறினாலும் போதாது. அவர்கள் இட்ட வித்யாதானத்திற்கு ஏதேனும் ஒரு வகையில் ஈடு செய்கிற வாய்ப்பு இவ்விரு நூல்களை எழுதி வெளியிட்ட தன்மூலம் நிறைபெறுகிறது.

என்னை இப்பணியில் ஊக்கி எனக்கு எல்லா வகையிலும் உதவியவர் காலஞ்சென்ற ஆயுர்வேதாசாரிய ஸ்ரீ V.B.நடராஜ சாஸ்த்ரியார் ஆவர். அவரது புண்ய ஸ்மரணத்துடன் அவருக்கும் இது காணிக்கை.

எனக்கு என்றென்றும் எல்லா நற்பணிகளிலும் தோன்றாத் துணையாக அருகில் நின்று என்னை அருட்பார்வையால் ஊக்குகின்ற ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடத்தை அலங்கரிக்கின்ற ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ சரணர்களின் திருவடிகளில் இதனை ஸமர்ப்பித்து ஸ்ரீ தந்வந்தரி பகவானின் நல்லருளால் பாரததேசம் நலமிக்க வாழ்க்கை பெற்று இன்புற்றிருக்க வேண்டி நிற்கிறேன்.

**S.V. ராதாக்ருஷ்ண சாஸ்த்ரி**

22. வீரேச்வரம் அப்ரோச் ரோடு
ஸ்ரீரங்கம் - 620 006
10 - 5 - 2000

உணவும் பானமும்

# பொருளடக்கம்

नमः श्रीगणपतये ।

ओं नमो वैद्यविद्यासंप्रदायकर्तृभ्यो वंशाऋषिभ्यो नमो गुरुभ्यः ।

धर्मार्थकाममोक्षाणामारोग्यं मूलमुत्तमम् ।

அறம் பொரு ளின்பமும் வீடும் பயக்க
உறுதுணை யாவதா ரோக்கியமே

நலமிக்க வாழ்க்கை முறை - 2

# உணவும் பானமும்

# अन्नपानविधिः

### உணவின் பெருமை - வேதம் கண்டது

*தைத்திரீய உபநிடதத்தின் மூன்றாவது ப்ரச்னத்தில் ஒரு நிகழ்ச்சி. எங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளை அறிய ஆவல் கொள்கிறார், பிருகு என்ற வேதமாணவர். தன் தந்தை வருணரிடம் இது பற்றி விளக்கம் கேட்டார். "இது இத்தகையது இங்கிருப்பது" என்று பரம்பொருள் சுட்டிக் காட்ட வொண்ணாதது. அதனைப் பற்றி ஆராய்ந்து தானே உணரத் தக்கது. ஆராயும் முறைக்கு உதவும் வகையில் பரம்பொருளிற்கு ஒரு இலக்கணம் தருகிறேன். "தோன்றும் பொருளனைத்தும் எதனிடமிருந்து தோன்றுகிறதோ, எதனால் உயிர் வாழ்கின்றதோ, பின்னர் எதில் அடங்கி அதுவாக ஆகிவிடுகின்றதோ அதுவே பரம்பொருள்" இந்த இலக்கணத்தைத் தான் நன்கு அறிந்த மெய்ப் பொருள்களில் பொருத்திப் பார்" என்றார் குரு. நன்கு அறிந்தவைகளில் மிக நெருங்கியவை - தன் உணவு, அதனை ஏற்கும் தன் ப்ராண சக்தி, அதன் மூலம் உலகத்தைத் தனக்குப் புலப்படுத்துகின்ற கண் காது வாக்கு மனம் முதலியவையாகும். அவைகளில் பரம் பொருள் இலக்கணத்தைப் பொருத்திப் பார்த்து அதனை ஆராய்ச்சி வாயிலாகக் கண்டு பரம்பொருளை அறிவாயாக என்று வழிகாட்டினார் வருணர்.*

*பிருகுவும் கடுமையான தவ ஆராய்ச்சியால் உணவே பரம்பொருள் எனக் கண்டார். தோன்றுவதனைத்தும் உணவிலிருந்து தான் தோன்றுகின்றன. உணவின் சத்தாக உடலில்*

*பரிணாமம் பெற்றுள்ள சுக்கிலமும் சோணிதமும் இணைந்து புதிய ஜீவசரீரத் தோற்றத்தைப் பெறுகின்றன. உணவேற்று அதன் பரிணாமமாக வளர்ச்சி பெற்ற ஒன்றே தன்னினத்தைச் சேர்ந்த மற்றொன்றைத் தோற்றுவிக்கிறது. அப்படித் தோன்றிய புதிய சரீரமும் தான் வளர உணவை எதிர்பார்க்கிறது. அதன் பணி முடிந்ததும் வாழ்நாள் இறுதியில் நெருப்பிற்கோ புழுவிற்கோ மண்ணிற்கோ ஏனையதொன்றிற்கோ உணவாகி மறைகிறது. அவ்வகையில் உணவே பரம்பொருள் எனத் தேர்ந்தார்.*

अन्नं ब्रह्मेति व्यजानात् । अन्नाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते ।
अन्नेन जातानि जीवन्ति । अन्नं प्रयन्त्यभिसंविशन्तीति ।

*பிறகு இதனைத் தன் தந்தையிடம் கூறினார். ''இது முடிவல்ல! இதனைத் தொடர்ந்து ஆராய்ந்து பரம்பொருளை அறிவாயாக'' என்று வருணர் காட்டிய வழியில் பிருகு மேன்மேலும் நுட்பமாக ஆராய்ந்து பரம்பொருளைக் கண்டுகொண்டார் - இந்த உபநிடதக்கதை உணவானது பரம்பொருளைப் போன்று பரவி நிற்பது என்பதை விளக்கும்.*

*உணவு என்று பொருள்படும் அன்னம் என்ற சொல் 'அத்' என்ற வினைச் சொல்லிலிருந்து உண்டானது. அன்னத்தைப் பற்றி விரிவாகக் கூறிவந்த அந்த உபநிடதம் ''உண்பவர் தோன்று முன்னரே உணவு உண்டானது என்கிறது.* ''अन्नं हि भूतानां ज्येष्ठम्'' *சிசு தோன்றுமுன்னரே தாயின் மார்பில் பால் தோன்றுவது இந்த தைவிக ஏற்பாட்டின் ஓர் அம்சம்.*

*உணவை முறைப்படி ஏற்பவன் அதனைச் செரித்துத் தனக்கு பயன்படச் செய்கிறான். முறையற்று உணவேற்பவன் உணவால் செரிக்கப்பட்டு மாய்கிறான், எனக் கூறுகிறது உபநிடதம்.*

अद्यते अत्ति च भूतानि । तस्मादन्नं तदुच्यते ।

**உணவின் பெருமை - வள்ளுவர் கண்டது**

*வள்ளுவர் பெருமான் சூது என்ற அதிகாரத்தின் இறுதியில் சூதாடுபவன் சூதாட்டத்தால் தான் இழந்தவைகளைப் பற்றிப் பின்னர் ஏங்குவதற்கு உவமையாக இதனைக் காட்டுகிறார். உணவிலும் செயலிலும் கருத்திழந்து வாழ்ந்தவன் நோய் வாய்ப்பட்டதும் அவன் உடம்பு துன்பங்களை அனுபவிக்க அனுபவிக்க அவனது உயிர்தான் இழந்த உடலின்பத்தையும் தான்*

இழைத்த தவறுகளையும் நினைத்து ஏங்கும் என்கிறார். உணவின் சிறப்பு, அதனை முறையின்றி பயன்படுத்தி அதனால் நோயுற்று வாடும் போது உணரப்படுகிறது. நிழலின் அருமை வெயிலில் தெரியும்.

**இழுத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல், துன்பம்**
**உழத்தொறூஉம் காதற்று உயிர்,**

உயிர் ஏங்காமல் வாழ்வை அமைத்துக் கொள்ளப் பெரிதும் உதவக்கூடிய குறிப்புகளை அவ்வதிகாரத்திற்கு அடுத்துள்ள மருந்து எனும் அதிகாரத்தில் வழங்கியுள்ளார். ''தன் உணவையும் செயல் முறையையும் முறை தவறிக் கொள்பவன். நோய் வாய்ப்படுகிறான். முன் உண்ட உணவு செரித்ததை அறிந்து பின்னர் உணவு கொள்பவன் நோய் வாய்ப்படுவதில்லை. அவனுக்கு மருந்து தேவைப் படுவதில்லை. அப்படி உணவை ஏற்கும் போதும் தன் உடல் மனப்பாங்கிற்கு மாறுகொள்ளாததும் கால தேசங்களுக்கு ஒத்து வருவதுமான உணவா என்பதைக் கவனிக்க வேண்டும். அதனையும் மனமும் நாக்கும் விரும்புமளவிற்கு எனக் கொள்ளாமல் உடலுக்கு இதமான அளவில் ஏற்கவேண்டும். அதனையும் மிதமாக - தேவைக்குச் சற்றே குறைந்த அளவில் உண்ண உண்பவனிடம் இன்பம் தங்கும். அளவுக்கு மீறி உண்பவனிடத்தில் நோய் தங்கும். இந்த அளவை நிர்ணயிப்பது வயிற்றுத்தீ. அதன் இயல்பைக் கவனியாமல் உண்பவனுக்கு நோய் வளர்ந்து கொண்டே போகும்'' இந்த உபதேசங்கள் மருந்தெனக் கொள்ளத்தகும். இவற்றைப் பின்பற்றுபவருக்கு மருந்து தேவைப்படாது.

**உணவின் பெருமை - சரகர் கண்டது**

சரகஸம்ஹிதை என்று ஆயுர்வேத மூலநூல். புனர்வஸு ஆத்ரேயர் என்ற மகரிஷி அக்னிவேசர் முதலான சீடர்களுக்குப் போதித்ததை சரகர் என்பவர் தொகுத்து நூலாக்கினார். ஆத்ரேயரது குருகுலம் நாடோடி. ஓரிடத்தில் தங்காமல் மலை காடு நகரம் சிற்றூர் என்று சுற்றி, ஆங்காங்குள்ள இயற்கைச் சூழலையும் மக்கள் வாழ்முறையையும் பற்றிச் சீடர்களை சிந்திக்கச் செய்து விவாதம் ஏற்படுத்திப் பிறகு உண்மையைத் தான் விளக்கிப் போதிக்கும் ஆத்ரேயரது போதனை முறை மிகச் சிறந்த காட்சியாகும். ஒரு நாள் சீடருக்குப் போதனை ஒரு ஆசிரமத்தில் இடம் பெறுகிறது. ஆத்ரேயரின் சீடர்களுடன் அந்த

ஆசிரமத்து முனிவர்களும் அன்றைய கருத்தரங்கில் பங்கு கொள்கிறார்கள்.

அன்று வாதத்திற்கு எடுத்துக் கொண்ட பொருள் ''ஆத்மா, மனம், பொறிகள், உடல் என்ற நான்கின் கூட்டு புருஷன். உடலில் நோய் நேரும் போது இந்த புருஷனைக் காட்டிலும் நோய் வேறுபட்டதா ? இந்த புருஷனில் அடங்கியதா ? அடங்கியதாயின் புருஷன் வளர்ச்சியடைய எது காரணமோ அதுவேதான் நோயின் வளர்ச்சிக்கும் காரணமாக இருக்க வேண்டும். வேறுபட்டதாயின் புருஷனின் வளர்ச்சிக்குக் காரணம் வேறு, நோய் வளர்ச்சிக்குக் காரணம் வேறு என்று கொள்வதா ? கருத்தரங்கில் புருஷனுக்குக் காரணம் எதுவோ அதுவே நோய்க்கும் காரணம் என்ற அடிப்படை ஏற்கப்பட்டு இவ்விரண்டிற்கும் காரணம் ஆத்மா, மனம் - வினை, உணவு, உடலில் சேர்ந்ததும் மாறும் முதல் நிலையான ரஸதாது, தாய் தந்தையர், இயற்கை, காலம் என்றெல்லாம் கருத்துக்கள் வாதிக்கப்பட்டு மறுக்கப்பட்டதும் முடிவுரையாக புனர்வஸு ஆத்ரேயர் கூறுகிறார்.

हिताहारोपयोग एव पुरुषवृद्धिकरो भवति ।
अहिताहारोपयोगः पुनर्व्याधिनिमित्तः ॥ (सू २४)

''ஹிதமான உணவின் சேர்க்கை புருஷ வளர்ச்சிக்குக் காரணம். ஹிதமற்ற உணவின் சேர்க்கை நோய்க்குக் காரணம்'' என.

உணவின் பெருமை - ஸுச்ருதர் கண்டது.

ஸுச்ருத ஸம்ஹிதை என்று மற்றொரு ஆயுர்வேத மூலநூல். அமிருதம் கடையும் போது பாற்கடலிலிருந்து அமிருத கலசம் ஏந்தியவராகத் தோன்றிய ஸ்ரீ தந்வந்த்ரி, மறுபடி காசிராஜனாகத் தோன்றி ஸுச்ருதர் முதலானோருக்கு மருத்துவம் போதித்தார். அதனை ஸுச்ருதர் தொகுத்துத் தந்தபடியால் ஸுச்ருத ஸம்ஹிதை என்பெயர். ஸ்ரீதந்வந்தரி உணவைப் பற்றிக் குறிப்பிடும் போது.

प्राणिनां पुनर्मूलमाहारो बलवर्णौजसां च । (सू. १.२८)

''உயிரின் ஆதாரம் உணவு. பலம் நிறம் உட்திடம் இவைகளுக்கும் அதுவே ஆதாரம்'' என்கிறார்.

உடலில் உயிரைத் தங்கவைப்பது உணவு. உடல் அமைப்பில் காணும் வளர்ச்சியையும் இடைவிடாது நடந்து

கொண்டிருக்கும் உடல் இயக்கத்தையும் கொண்டு உடலில் உயிர் தங்கியிருப்பதை அறிகிறோம். உடலில் உயிர் தங்கியிருப்பது மட்டும் வாழ்வல்ல. திடமுள்ள சரீரமும் மனமும் இணைந்து நன்கு இயங்கி வாழ்வின் குறிக்கோளாகிய இன்பத்தைப் பெற்றுத் தன் இனத்தைப் பெருக்கி நிறைவுடன் மறைவைத்தான் உடல் - உயிரிணைப்பின் பயனாகக் கருதுகிறோம். இத்தகைய வாழ்வே ஆரோக்கிய வாழ்வு.

உடல் வளர்ச்சி ஒவ்வொரு நொடியிலும் நிகழ்கிறது. வளர்ச்சி பரிணாமத்திற்கு இடமளிக்கிறது. பரிணாமம் என்பது பொருளின் ஒரு நிலை அழிந்து அதன் தொடர்பாக மற்றொரு நிலை தோன்றுவதாகும். பாலப் பருவத்தில் வளர்ச்சித் தத்துவ மிகுதியால் அழிவு அதிகம் புலப்படுவதில்லை. முதுமையில் அழிவுத் தத்துவமிகுதியால் வளர்ச்சி அதிகம் புலப்படுவதில்லை. யுவப்பருவத்தில் வளர்ச்சியும் அழிவும் ஒரே சீராக அமைவதால் அதிக வேற்றுமை புலப்படுவதில்லை. தேய்விற்கு ஈடு செய்யுமளவிற்கு மேற்பட்டு பாலியத்தில் வளர்ச்சி நிகழ்கிறது. முதுமையில் வளர்ச்சி பெறுமளவிற்கு மேலாகத் தேய்வு ஏற்படுகிறது.

நொடிக்கு நொடி ஏற்படும் தேய்விற்கு ஈடு செய்யும் பணி உணவினுடையது. பரிணாமத்திற்குத் தேவையான இயக்கங்கள் உடற்சூட்டால் உந்தப்படுகின்றன. அந்தச்சூடு உணவால் கிடைக்கிறது. உடலின் நிறைவு. பொறிகளின் தெளிவு, மனவளர்ச்சி, மனத்தின் சுறுசுறுப்பு, தோலின் மென்மை, நிறப்பொலிவு இவை அனைத்தும் உணவால் கிடைக்கின்றன. அவ்வப்போது தேய்விற்கு இட்டு நிரப்புவதுடன் கூடச் சேமிப்பு நிதியாக வளர்ச்சிக்கும் இயக்கத்திற்கும் தேவையான தாது சக்திச் சேமிப்பு எனும் ஓஜஸ் நிறைக்கப்படுகிறது. பல நாட்கள் சரியான உணவு பெறாவிடினும் உயிர் உடல் இணைப்பு பிரியாதபடி காப்பாற்றுவது இந்த ஓஜஸ்ஸே. இதுவும் உடலில் அன்ன சாரத்தின் சாரமாகச் சேமிக்கப்பெறுகிறது. ஆதலால் பிராணிகளின் வாழ்வில் உணவு மிக முக்கியமான ஆதாரப் பொருளாகத் திகழ்கிறது என்கிறார் ஸுச்ருதர்.

## இந்நூலின் லட்சியம்

1. ஆரோக்கிய வாழ்வில் உணவிற்குள்ள முக்கியத்துவத்தை வேதம், வள்ளுவர் பெருமான், சரகர், ஸுச்ருதர் இவர்களுடைய

வாய்மொழி மூலமாக அறிமுகப் படுத்திக் கொண்டோம். உணவு முறை பற்றிய விளக்கம் தரும் நூல்கள் பல இன்று வெளியாகியுள்ளன. அவை அனைத்தும் மேனாட்டு வழியைப் பின்பற்றி அந்த ஆராய்ச்சிகளின் அடிப்படையில் தொகுக்கப்பட்டவை. அவை தரும் விளக்கங்கள் ஆரோக்கிய வாழ்விற்கு மிகவும் ஏற்றவையே. இந்நூல் தரும் விளக்கங்கள் அவைகளால் பெற்ற விளக்கங்களுக்கு மாறுபட்ட அடிப்படைகளைக் கொண்டவை. இரண்டின் கண்ணோட்டங்களும் வேறுபட்டவையே. அதனால் அந்நூல்களில் பெருத விளக்கங்களை இதிலிருந்தும் பெறலாம்.

2. விஞ்ஞான அடிப்படையில் தொகுக்கப்பட்டு உலகத்தினர் எல்லோராலும் ஏற்கப்பட்டுள்ள நவீன உணவு தத்துவங்களை விட இதில் என்ன சிறப்பு உண்டு ? இம்முறைகளைத்தனித்து அறிந்து கொள்வதால் என்ன பயன் ? என்ற கேள்வி எழக்கூடும். நம் நாட்டில் நவீன விஞ்ஞான முறை தோன்றுவதற்குமுன் உணவு பற்றி ஆராய்ந்து அதனை முறைப்படுத்தாதிருந்தால் நவீன முறைகளை ஏற்பது மிகவும் ஏற்றதே. பாரததேசம் ஏனைய தேசங்களைப் போல் இன்று நேற்று ஏற்பட்ட புதிய தேசமல்ல. அறிவற்ற காட்டுமிரண்டிகள் முறையற்று வாழ்ந்த தேசமல்ல. பாரத தேசத்தின் ஒவ்வொரு சிறு பகுதியில் வாழ்பவர் கூட பண்பாடும் மேதையும், செயல்திறனும் பெரு மனமும், கடந்த கால அனுபவத்தை அஸ்திவாரமாக்கி, வருங்காலத்தை முன்னோக்கித் தற்காலத்தை அமைத்துக் கொள்ளத்தக்க கர்மயோகமும் வாய்த்த பெருமக்கள். மற்ற தேசங்கள் உருப்பெறுவதற்குப் பல்லாண்டுகள் முன்னரே சிறந்த நாகரிகத்துடன் வாழ்ந்தவர்கள். பாரதம் விஞ்ஞான அடிப்படையில் துருவி அறியாத கல்வித்துறையோ செயல்துறையோ கலைத்துறையோ கிடையாதெனலாம். அப்படி அவர்கள் பல்லாயிர ஆண்டுகளாகக் கண்ட உணவு முறையை - அனுபவத்தால் சீர்பட்ட முறையை இங்கு தொகுத்தளிக்கிறோம். அவை இன்றும் அனுபவத்தில் பயன் தருவதாகக் காணப்படுகின்றன.

3. இன்று மக்களின் ஒரு பகுதியினர் முன்னோர் கண்டதைப் பகுத்தறிவுக்கு ஒவ்வாதவை என்ற மூடநம்பிக்கை காரணமாகப் புறக்கணித்து முற்காலத்துடன் தொடர்பு கொண்டதனைத்தையும் தவிர்க்கிறார்கள். அவர்கள் அதனால் இழப்பது மிகப் பெரிய

சொத்து. உமியென நினைத்து அரிசியை இழக்கிறார்கள். பாரதீய விஞ்ஞானத்துடன் ஒப்பிடும் போது இன்றைய நவீன விஞ்ஞானம் மிகப் பாலிய வயதுள்ளது. நம் முன்னோர் பெற்ற அனுபவத்தையும் அதனை விளக்கும் யுக்திகளையும் நவீன விஞ்ஞானக் கண் கொண்டு நோக்கும் திறம் பெற இன்னும் எத்தனை ஆண்டுகள் காத்திருக்க வேண்டுமோ ? பொதுவாக அனுபவத்தில் தேர்ந்ததைக் கையாள விஞ்ஞானம் தேவையில்லை.

உணவு பசியை ஆற்றுகிறது. இதனை அறிய விஞ்ஞானம் தேவையில்லை. இன்று வரை இதில் அனுபவம் சிசுவுக்கும் உண்டு. உணவு எப்படிப் பசியை ஆற்றுகிறது என்றும் எந்த உணவு எவ்வகையில் பயன்படுகிறது என்றும் அறிய விஞ்ஞானம் உதவலாம். அதனையும் அனுபவமே கற்றுத் தரும்போது விஞ்ஞானத்தின் உதவியை நாட வேண்டியதில்லை. புதிதான சூழ்நிலையில் தற்போதுள்ளதனைத்தும் பயனற்றுக் காணும் போது விஞ்ஞானம் புதிய கண்டுபிடிப்புகளைத் தரலாம். மருத்துவத் துறையில் இத்தகையக் கண்டுபிடிப்புகள் அனந்தம். அவை சிறந்த உதவி தருகின்றன. எனினும் விஞ்ஞானம் அசேதனத்துடன் விளையாடும் போது அது முழு வெற்றி பெறுகின்றது. விஞ்ஞானம் சேதனத்துடன் விளையாடும் போது எதிர்பார்த்ததற்கு மாறான விளைவுகளும் சில இடத்திலாவது தோன்றுகின்றன. சேதனம் அதன் முழுவடிவில் எந்த விஞ்ஞானத்திற்கும் முழுவதும் கட்டுப்படாமலிருப்பதே அதற்குக் காரணம்.

சில விசேஷ உணவுகள் விஞ்ஞான முறையில் தயாரிக்கப் பெறுகின்றன. அவைகளைப் பெறுபவர்கள் நல்ல உடல் வளர்ச்சியும் தேகக்கட்டும் திடமான அங்கங்களும் பெற்றுப் பெற்றோரை விடச் சிறப்பான வளர்ச்சியுடன் காணப்படுகிறார்கள். சென்ற தலைமுறையினரை விட இந்தத் தலைமுறையினர் நல்ல உடல் வளர்ச்சி பெற்றிருப்பது கண் கூடு. ஆனால் இது பொருளாதார வசதி மேல்தரத்தில் பெற்றவருக்கு மட்டுமே கிட்டுவதாயுள்ளது பெருங்குறை. நாளடைவில் இது நீக்கப் பட்டு விடலாம்.

கறிகாய் முதலியவைகளுக்கும் உரங்கள் மூலம் நல்வளர்ச்சி ஏற்பட்டு விவசாயிகட்கு அதிக மகசூல் கிடைக்கிறது. ஆடு மாடு

கோழி முதலியவையும் சிறந்த தீவனங்களால் நல்வளர்ச்சி பெற்று வளர்ப்பவருக்கு லாபம் தருகின்றன.

ஆனால் ! உடல் வளர்ச்சி பெற்றுள்ளதற்கேற்ப மனிதனிடம் மன வளர்ச்சியைக் காணோம். நெருக்கடியைச் சமாளிக்கும் மனத்திட்பம், செயலாற்றும் திறன், சகிப்புத்தன்மை, பேராண்மை, அன்பு போன்றவை மன வளர்ச்சியின் அடையாளங்கள், கிளர்ச்சி, குமுறல், பேராசை, சண்டை, துவேஷம், சகிப்பின்மை, செயலாற்றாமை, நெருக்கடிகளில் நமக்காவது என்ன என்ற மெத்தனப் போர்வையில் உள்ள கோழைத்தனம் முதலானவை மன வளர்ச்சியின்மையின் அடையாளங்கள். இன்று மன வளர்ச்சியின் அடையாளங்கள் மறைந்து வருகின்றன.

சிறிய பணிக்கும் செயலாற்றுவதற்கு விஞ்ஞானக் கருவிகளையே பெரிதும் எதிர்பார்க்கும் நம்மிடையே வராஹ மிஹிரரோ, ஆரியபடரோ, அபிமன்யுவோ, சங்கரரோ, புத்தரோ, வள்ளுவரோ தோன்ற இடமில்லை. தான் செல்வதே நல்வழி என்ற பிடிவாதம். அதனால் குடும்பத்திற்குள்ளும் ஊருக்குள்ளும் தேசத்திற்குள்ளும் உலகத்திற்குள்ளும் மோதல் வளர்வதைக் காண்கிறோம். இன்று பெருமனம் படைத்தவரைக் காண்பது அரிது.

இதற்கும் உணவிற்கும் என்ன ஸம்பந்தம் ? எனத் தோன்றலாம். மன வளர்ச்சியில் உணவிற்குப் பெரும் பங்கு உண்டு. மனமே உணவை ஒட்டித்தான் வளர்கிறது. அந்நமயம் ஹி ஸௌம்ய மந: என்பர். மனத்தை வளர்க்கும் உணவுத் திட்டம் தனிப்பட்டதே. நாம் பெறும் உணவு மன வளர்ச்சிக்கும் போதாததே.

உருவில் பெரிய காய்களை அங்காடிகளில் காண்கிறோம். பெருமளவில் உரம் போட்டு வளர்த்தவை அவை. உரு வளர்ச்சியைப் பூர்ணமாய் பெற்றிருக்கும் அவைகளில் மணத்தையும், சுவையையும் காணோம் என்பான் ஒரு சாப்பாட்டு ராமன். அது உண்மையே, உரம் போடாமலும் வேறு விஞ்ஞானப் பயிர் வளர்ப்பு முறையைத் தழுவாமலும் தானே வளர்ந்த தோட்டத்துக் கறிகாய் சிறியதாயினும் மணமும் ருசியும் மிக்கதாகக் காணப்படுகிறது. சாப்பாட்டு ராமன் இதனைத் தேடி வாங்குவான். இது போல் உடல் வளர்ச்சிக்காக மட்டும்

பயன்படும் திட்டங்கள் மனமுள்ள மனிதனின் வளர்ச்சிக்குப் பெரிதும் பயன்படாது. உள்ளத்து வளர்ச்சிக்கெனத் தனித்துத் திட்டமிடுவது வீண் சிரமம். இது இரண்டையும் ஒருங்கிணைத்துத் தருவது ஆயுர்வேத உணவுத் திட்டம். மகரிஷிகள் ஆராய்ந்து தொடர்ந்து கையாண்டு நலன் பெற்ற திட்டம். அதனை விளக்குவதே இந்நூலின் லட்சியம்.

மனிதர் எல்லோரும் சமம் என்றொரு தவறான கருத்து. சாதி மத அடிப்படையில் இதனைக் கூறவில்லை. மனிதனுக்கு மனிதன் சமம்; எந்த அளவில் ? அவன் ஆடல்ல, மாடல்ல குரங்கல்ல, மனிதன் தான் என்ற அளவில்தான். மனிதனுக்கும் மனுஷிக்கும் பிறந்தவனாக இருந்தாலும் ஒரு கொடிய அரக்கனையோ முழு முட்டாளையோ சமுதாயம் மனிதன் எனக் கொள்ளாது. ஒவ்வொரு மனிதனும் ஒரு தனி இனம். அதனால் அவனவன் தன் தன் நிலையைக் கண்டு தனக்கேற்ற உணவை அமைத்துக் கொள்ள நேரிடுகிறது.

ஒரு மனிதனுக்கே பகலில் ஒத்துக் கொள்வது இரவில் ஒத்துக் கொள்வதில்லை. கோடையில் ஒத்துக் கொண்டது, காரில் ஒத்துக் கொள்ளவில்லை. இளவயதில் ஒத்துக் கொண்டது முதுமையில் ஒத்துக் கொள்ளவில்லை. நேற்றிருந்த மன நிலையில் ஒத்துக் கொண்டது இன்றுள்ள மன நிலையில் ஒத்துக் கொள்ளவில்லை. இவ்வளவு வேறு பாடுகள் கொண்ட நுண்ணிய மனித உடல் பாங்கில் எல்லோருக்கும் பொதுவான உணவுத் திட்டமோ காலரிக்கணக்கோ உடல் தேவை நிர்ணயமோ அமைய முடியாது. அவனவன் தன் சுய தேவையை நிர்ணயிக்கக் கருத்தில் கொள்ள வேண்டிய பல தத்துவங்களை ஆயுர்வேதம் விளக்கியுள்ள அளவு வேறு எந்த விஞ்ஞானமும் விளக்கவில்லை. எனத் திடமாகக் கூறலாம். அவைகளைக் குறிப்பிட்டுச் சுட்டிக் காட்டுவதும் இந்த நூலின் லட்சியம்.

''மனிதன், குதிரை, பசுமாடு இம்மூன்றும் சபலத்தை அடக்கித் தேவையான ஆகாரத்தை அளவோடு உட்கொண்டு ஜடராக்னியைத் தூண்டிவிட்டு ஆகாரத்தைச் செரித்துக் கொள்கிறது. நோயில்லாமல் நீண்ட காலம் வாழ்கிறது'' என்று யஜுர்வேதம் குறிப்பிடுகிறது. இன்றையச் சமுதாய வாழ்ப் பெரு வெள்ளத்தில், பிழைப்பிற்காக அவனவன் ஏற்றுக் கொண்ட தொழில் அமைப்பில் தக்க உணவையும் அதனை ஏற்கத் தக்க நேரத்தையும் தக்க சூழ்நிலையையும் அமைத்துக் கொள்வதில்

சென்ற தலைமுறையினர் பெற்றிருந்த சுகந்திரத்தை இன்றைய மனிதன் முழுவதும் இழந்து விட்டான் எனலாம்.

பெரும்பாலானவருக்குப் பெரும் பொழுது, உணவு தருகிற வீடு அமைவதில்லை. ஹோட்டல், காண்டீன் என்றே வாழ்பவர் பலர். அங்கு கிடைக்கும் உணவின் தரம் எதிர்பார்வைக்கு மாறுபட்டது. உடலுக்கு இதமானது என்ற குறிக்கோளைக் கைவிட்டுக் கிடைப்பதைப் பகிர்ந்துண்பது, வீட்டிலிருந்து தான் தொழில் புரியுமிடத்திற்கு உணவைக் கொணர்ந்தாலும் அது பக்குவப்படுத்தப்பட்ட நேரத்திற்கும் உண்ணும் நேரத்திற்கும் இடையே பெருத்த இடைவெளி, பொதுவாக உணவேற்கத் தக்க சூழ்நிலை அமையாதிருந்தாலும் அங்கு கடனுக்காக உணவேற்பது, நல்ல பசியைப் புறக்கணிக்க நேரிடுவது, போலி மரியாதைக்கும், சூழ்நிலை நிர்பந்தத்திற்கும் அல்பப் பசிக்கும் உட்பட்டு அதையும் இதையும் நேரங்கெட்டு ஏற்பது; இப்படிப் பல அலங்கோலங்களே வாழ்க்கைக் கோலங்களாக அமைந்திருக்கும் நிலையில் வேதமும் வள்ளுவரும் சரகரும் ஸுச்ருதரும் ஏனையோறும் கூறும் உணவு முறை பற்றிப் படிப்பது வீண் பொழுது போக்கு எனச் சிலர் கருதலாம். ஆனால் தனக்கு இந்த அலங்கோல வாழ்வே சதமென நினைக்க முடியாத நிலை ஒருநாள் அவர்களுக்குத் தோன்றலாம். அன்று அவர்களுக்கு இது பயன்படும்.

வாழ்வின் பூர்ண கட்டமாகிய 20 - 40 வயது காலத்தில் கரடு முரடான வாழ்க்கை முறையைச் சமாளிக்கிற சக்தி உடலுக்கு உண்டு. ஆனால் அளவுக்கு மீறித் தவறிழைத்தால் பின் விளைவாக நீடித்த - சிகித்ஸைக்குக் கட்டுப்படாத - ஆழ்ந்த - பரந்த நோய்நிலை பற்றிக் கொள்வது கண்கூடு. இன்று மருத்துவத் தொழில் இத்துணை வருவாய் பெருக்குடன் தனித்து விளங்குவதற்கு முழுச் சுமைதாங்கிகள் இந்த வர்க்கத்தினரே. இதனைப் புரிந்து கொண்டு திருந்தி வாழ்வைச் சீரமைக்க விரும்புவர் இந்த நூலால் நன்மை காண்பர். இதனைப் பொருட்படுத்தாமல் தன்னை மருந்துக் களஞ்சியமாக்கிப் பெருமைப்படுபவர்கள். கூடத் தானிழந்த இன்பம் எத்தகையது என்று தனியே நின்று மதிப்பிட இது உதவக்கூடும்.

உணவால் ஏற்படும் நிறைவு

பிண்டமெனும் தனிமனிதனின் உடலும் அண்டமெனும் உலகமும் ஒரே சக்திமிக்க மூலப் பொருள்களாலானது.

அவைகளின் சேர்க்கை வேறுபாடுகளால் விதவிதமான தோற்றமும் பெயர் வேறுபாடும். அந்த மூலப்பொருள் எனக் கருதப்படுபவை சக்திமிக்க பொருளா, பொருள் எனக் கூறமுடியாத சக்தி அலைகள் மட்டுமா என்ற சர்ச்சை அன்று தொட்டு இன்று வரை இருந்து வருகிறது. அம்மூலப் பொருள்கள் ஐவகைப்படும். ஐந்து பூதங்கள் என்பர் அதை. அவைகள் ஒன்றொடொன்று இணைவதில் அதிக விருப்பமுள்ளவை போலும், அப்படிச் சேரும் பரபரப்பில் இணைந்து கூட்டுப் பொருளானதில் கூட்டுச் சேர்ந்த மூலப்பொருளின் அளவும் குணசித்திரமும் பொருளுக்குப் பொருள் மாறுபடுகின்றன.

தனி மனிதனின் உடலில் பல பகுதிகளாக அமைந்தவையும் அத்தகைய மூலப்பொருள்களே. ஆனால் அவை அந்த மூலப் பொருளாகத் தனித்தில்லாமல், கூட்டுப் பொருளாகவே காணப்படுவதால், குணத்தால் மட்டும் அவை எந்த எந்த மூலப்பொருளாலானது என்று ஊகிக்க முடியும். அதே போல் உணவுப் பொருளாகக் கிடைப்பவையும் மூலப் பொருளின் ஒருவகைக் கூட்டுப் பொருளே. உடலியல்புக்கு ஏற்ற மூலப்பொருள் சேர்க்கை அமைந்தவற்றை உணவு எனக் குறிப்பிடுவர். உடலியல்பிற்கு ஏற்காதவை விஷம்.

உடலில் பல கூட்டுப் பொருள்கள் இருக்கின்றன. ரக்தம் தசை எலும்பு என்றவாறு அவற்றைக் குறிப்பிடுகிறோம். அவை ஒவ்வொன்றும் ஐம்பூதங்களாலானதாயிருந்தாலும் ஐம்பூதங்கள் கூட்டுச் சேர்ந்தவகை காரணமாகத் தன்மையில் ஒன்றொடொன்று மாறுபட்டுக் காண்கின்றன. அதனதன் மாறுபாட்டிற்கேற்ப உணவையும் பல பொருள்களைக் கூட்டித் தயாரிக்கிறோம். தேவைக்கேற்ப அவ்வப்போது அந்தக் கூட்டை மாற்றிக் கொள்கிறோம். இந்தக் கூட்டில சில எல்லாப் பகுதிகளுக்கும் எப்போதும் தேவைப்படுவதால் அவை நிரந்தரமான உணவாக ஏற்கப்படுகின்றன. அவை அரிசிச் சாதம் குடிதண்ணீர் போன்றவை. அடுத்து முக்கியத்துவம் பெறுபவை ரக்தம் தசை போன்ற அதிக அளவில் பணியாற்றும் பகுதிகளை இட்டு நிரப்புபவை. இப்படிப் பல வகைகளில் தேய்வை ஈடுசெய்து நிரப்புவது உணவின் முக்கியப் பணிகளில் ஒன்று.

### உணவு தரும் சக்தி

உணவு சக்தியைத் தருகிறது. உடலிலுள்ள ஒவ்வொரு பகுதியும் தன் தன் செயலை ஒழுங்காக ஆற்றும் திறமை சக்தி

எனப்படும். அந்த செயல்முறை ஒன்றுக்கொன்று மாறுபடும். அந்த சக்தி பல் உருக்கொள்கிறது. கை கால் முதலியவைகளின் இயக்கம் (சேஷ்டா - யந்த்ர சக்தி), பொறிகள் மூலம் உணர்ந்ததை மூளைக்கும் மூளையிலிருந்து வரும் தூண்டுதல்களை வெளி உறுப்புகளுக்கும் கொணரும் சக்தி (ஸம்ஜ்ஞா - தந்திர சக்தி), ஏற்ற உணவில் பலவித பக்குவங்களை ஏற்படுத்தி அவற்றை உருமாற்றி உடற்பகுதிகளாக அமைத்து தரும் பரிணாமம் (தாது பாகம் - ராஸாயனிக பரிவர்தனம்) உணவை ஏற்று உடல் நிறைவு காண்பது (புஷ்டி) என்றவாறு ஒரே சக்தியே பல உருக்கொண்டு இயங்குகிறது. அந்த சக்திவகை அனைத்திற்கும் உணவே உற்பத்தி ஸ்தானம். இவைகளில் முக்கியமானது பரிணாம சக்தி. அதன் உதவிகொண்டே மற்றவை நிகழ்கின்றன.

கதிரவனின் சக்தி

உணவு சக்தி தருவதற்குக் கதிரவனின் கதிர்கள் பெருமளவு உதவுகின்றன. உலகின் பிராண சக்திக்கு மூலஸ்தானம் சூர்யன். அதன் ஒளி மூலம் கிடைக்கும் பிராண சக்தியை மரம் செடி கொடி முதலிய தாவரங்கள் சேமித்துக் கொண்டு, நமக்கு உணவாகி நம்மிடம் சேர்க்கின்றன. சூர்யனிடமிருந்து வரும் பிராணசக்தி ஓஷம் எனப்படும். அதனைச் சேமித்து வைத்துக் கொள்வதால் தாவர இனத்தை ஓஷதி என்பர். இந்த ப்ராண சக்தியைக் கதிரவனிடமிருநது பிரித்து ஓஷதிகளில் புகுத்தி சக்திமிக்கவையாகச் செய்பவன் சந்த்ரன். அதனால் அவனுக்கு ஓஷதீசன் என்ற பெயருண்டு. இப்படி ப்ராண சக்தியை அதிக அளவில் தாங்கி நிற்பதால் தாவரங்கள் சக்திமிக்க உணவாகின்றன. தாவரங்களையே உண்டு வளரும் ஆடு முதலியவை தாவர உணவிற்கு அடுத்தபடியாக உணவாகின்றன. அந்த ஆடு முதலியவற்றை உணவாகக் கொள்ளும் விலங்கினங்கள் உணவுத் தன்மையில் மிகத் தாழ்ந்தவை.

கதிரவனிடமிருந்து பிரிந்த ப்ராணசக்தி காற்றில் கலந்து நம் மூச்சு வழியே உட்சென்று பரிணாமங்கள் சரியே நடக்க உதவுகின்றது. இதனால் கிடைக்கும் தாபம் தேவையான அளவிற்குட்பட்டு இதமாகப் பயன்படுவதைச் சந்த்ரனிடமிருந்து ப்ரதிபலிக்கும் சூர்ய கிரணங்கள் கண் காணிக்கின்றன. அக்னீ - ஷோமம் என்று தர்சனங்கள் கூறும் இந்த ஸௌர்ய சந்த்ர சக்திகள் தாவர உணவின் மூலமும் தாவர உணவை உண்டு வாழும்

பிராணிகளாலான உணவின் மூலமும் நம்மைத் தாங்குகின்றன.

**உணவு தரும் உடற்சூடு**

உணவு உடலில் முக்கிய எரிபொருளாகிறது. உடலில் நடைபெறும் பரிணாமங்கள். அனைத்திற்கும் சூடு - தாபம் இன்றியமையாதது. பிராண சக்தி கொண்ட உணவு உட்சென்றதும், முன் உழைப்பால் குறைந்திருந்த அந்தத் தாபம் தன்னிலை பெறுகிறது. இந்த உணவு தன்னையே எரி பொருளாகக் கொண்டு சூடு குறைவதை ஈடுசெய்து தொடர்ந்து ஒரே நிலையில் பரிணாமங்கள் நிகழச் செய்கின்றது. கரும்பாலையில் கரும்புச் சக்கையையே எரி பொருளாக்கி அதன் சூட்டில் வெல்லம் காய்ச்சுவார்கள் அல்லவா ? உணவு எரிபொருளானதும், எரிபொருள் கிடைக்கத் தாமதமானால், உடலில் ஏற்கனவே சேர்ந்து முழுவதும் தாதுவாக மாறாத கொழுப்பு முதலிய சாரப்பொருளையே எரிபொருளாகக் கொண்டு இந்த பரிணாமம் நடைபெற்று விடும். அப்போது உணவு ஏற்கப்பெறாவிடில், தாதுக்களாக மாறியவற்றையே எரிபொருளாக்கிவிடும். தாதுக்களும் அழிந்து விட்டால் தன்னையே - ப்ராணசக்தியையே எரிபொருளாக்கிக் கொண்டு அழித்து விடும்.

आहारं पचति शिखी दोषानाहारवर्जितः पचति ।
दोषक्षये तु धातून् धातुक्षये पुनः प्राणान् ॥

பட்டினி கிடந்து உயிர் துறப்பவரிடம் இந்த பரிணாமங்களைக் காணலாம்.

எந்த ஒரு சிறு இயக்கமும் அதனளவில் சூட்டை அதிகப்படுத்தும். இந்தச் சூடே தோலில் ப்ரதிபலிக்கிறது. இதனையே **தேஹோஷ்மா** - உ டற்சூடு (டெம்பரேசர்) என்பர். இந்த சூடு குறைந்தால் உடலியக்கம் பாதிக்கப்பெறும். இந்தச் சூட்டைக் காப்பாற்றுபவை தசைகளும் சில கிரந்திகளும். இவை எப்போதும் இயங்கிக் கொண்டே இருப்பதால் உடற்சூடு ஒரே விதமாக இருக்கின்றது.

**உணவேற்குமுன் கவனிக்கத் தக்கவை.**

பெரும்பாலும் பசி வேளையில் கிடைப்பதை உண்பது வழக்கில் உள்ளது. எனினும் (1) சில நெருக்கடி நிலைகளிலாவது - (2) உடல் நிலை சரியாக இல்லை, ஏதோ கேடு வர இருக்கிறது

என்று உணரும் போதாவது - (3) உடல் கனம், அசதி, செயல் தடுமாற்றம், பசிமந்தம் போன்ற இனம் தெரியாத நோய்ச் சின்னங்கள் (பூர்வ ரூபங்கள்) தோன்றியுள்ள நிலையிலாவது உணவைக் கவனித்து நிதானித்து ஏற்பது அவசியம். கவனிக்க வேண்டியவை பல. அவைகளில் எட்டு முக்கியமானவை.

1. உணவுப் பொருளின் தன்மை : ஏற்கும் உணவுப் பொருள் எத்தகையது ? எளிதில் செரிக்கக்கூடியதா ? (லகு - வருத்த அரிசியிலான சாதம், சாறுள்ள பழங்கள் முதலியவை) தாமதித்துச் செரிப்பதும் வயிற்றில் கன உணர்ச்சி தருவதுமானதா ? (குரு - மாப்பண்டம், கிழங்கு, பலாப்பழம் போன்றவை) சூட்டை அதிகப் படுத்துவதா ? (உஷ்ணம் - சுக்கு, மிளகு, மிளகாய் போன்றவை) குளிர்ச்சி தருவதா ? (சீதம் - தயிர், குளிர்ந்த நீர் போன்றவை) என அறிந்து சூழ்நிலைக்குத் தக்கதை ஏற்றுத் தகாததைத் தவிர்ப்பது.

2. பக்குவ முறை : நீரும் நெருப்பும் துணை செய்ய அந்த உணவுப் பொருளில் ஏற்படும் மாற்றங்கள் கவனிக்கத் தக்கவை. சுக்கு, மிளகு போன்ற தீபனப் பொருள் சேர்க்கை ; ஏலம் கிராம்பு போன்ற மணப்பொருள் சேர்க்கை ; அரிசி உளுந்து மாவை இட்லியாக, வரட்டுத் தோசையாக, நெய் எண்ணெய் ததும்பும் ஊத்தப்பமாக போண்டாவாக தயாரிக்கும்போது அதில் ஏற்படும் மாறுதல்கள் அனந்தம், சுவையில் மட்டுமல்ல - தன்மையிலும்தான்.

3. கூட்டுப் பொருள் : - ஸாம்பார் சாதமும் பால் சாதமும் ; இட்லியும் பாலும் ; தேனும் நெய்யும் என்றவாறு தவறான சேர்க்கையால் கேடு விளைவிப்பவை சில. வெல்லமும் நிலக்கடலையும், பலாப்பழமும் தேனும் நெய்யும் என்றவாறு நல்ல சேர்க்கையால் ஒன்றுக்கொன்று உதவுபவை சில. இவை கவனிக்கத் தக்கவை.

4. அளவு : இது இரு வகைப்படும். ஒன்று உணவாகக் கொள்ளவிருப்பவை அனைத்தின் மொத்த அளவு - ஸர்வக்ரஹம் (கொள்ளளவு), மற்றொன்று அவற்றில் ஒன்றொன்றின் தனித்தனி அளவு - பரிக்ரஹம், சாதம் இத்தனை, கறிகாய் இத்தனை, தயிர் இத்தனை, நெய் இத்தனை என.

5. உணவு விளையும் தேசம் : நேபாளத்தின் வஸுமதி அரிசி, நெல்லூர் சம்பா, ஆக்ரா பருப்பு, சிவகாசி மிளகாய் என்பது

போல் விளையும் நிலத்திற்கேற்ப பொருளின் தன்மையை உணர்வது. நீர் சதுப்புள்ள பூமியில் விளைந்த பொருளுக்கும், மானவாரி பூமியில் விளைந்ததற்கும் தன்மையில் மாறுபாடு உண்டல்லவா ? கேரளத்து நேந்திர வாழைக்கும் தமிழ்நாட்டு நேந்திரவாழைக்கும் தன்மையில் மாறுபாடு உண்டு. நீலகிரி உருளைக்கிழங்கிற்கும் விஜயவாடா உருளைக்கிழங்கிற்கும் தன்மையில் மாறுபாடு உண்டு.

6. பருவம் : மனிதனின் வாழ்வில் வளர்ச்சிக்கேற்ப - பாலியம், யௌவனம் முதுமை இவற்றிற்கேற்ப உணவால் உடலில் விளையும் மாறுதல்கள் சில. மழை, பனி, வெயில், காற்று காலங்களில் உணவால் ஏற்படும் மாறுதல் சில.

**7. உணவேற்கும்போதுள்ள உடல்நிலை:** முன் உண்ட உணவு எளிதில் ஜீர்ணமானதா ? தாமதமேற்பட்டதா ? புளிப்பு ஏப்பம், பசிமந்தம், நெஞ்செரிவு, வயிற்றோட்டம், அடிவயிற்றில் கனம் - இவை ஜீர்ணமாகும் நிலையில் ஏற்படும் இயற்கை நிலை மாறுதலை அறிவிப்பவை. அதனை உணர்ந்து அடுத்த வேளை உணவைத் தக்கபடி அமைத்துக் கொள்ளுதல் நல்லது.

8. உணவேற்பவன் : ஒருவனுக்குப் பால் சாப்பிடப் பேதியாகும். மற்றொருவனுக்குப் பால் சாப்பிடாவிடில் வயிற்றில் கொதிப்பு ஏற்பட்டு உஷ்ண பேதியாகும். ஒருவனுக்கு ஒத்துக் கொள்வது மற்றொருவனுக்கு ஒத்துக் கொள்ளும் என்று கூறுவதற்கில்லை. தேகவாகு ஒவ்வொருவருக்கும் தனி. இந்தத் தேகவாகு சில சமயங்களில் பெருத்த இடையூருக நிற்கும். செயற்கையாக ரத்தம் ஏற்ற வேண்டிய நெருக்கடிகளில் A.B. என்றவாறு ரத்தவர்க்கப் பிரிவினை சோதனையைத் தருவது போல்.

இப்படி எட்டு குறிப்புகளைத் தருகிருர் சரகர். ஆஹார விதி, விசேஷ ஆயதனம் என்ற தலைப்பில்.

மிதமான உணவு:

"தீயளவு அன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயளவு இன்றிப் படும்"

என்ருர் வள்ளுவர் பெருமான். தன் ஜீர்ண சக்தியை மதிக்காமல் அளவுக்கு மீறி அதிகமாக உண்பவனுக்கு நோயும் அளவுக்கு மீறி எல்லையின்றி ஏற்படும் என்ற குறிப்பைத் தருகிருர்.

இறைவன் வழிபாட்டில் மனம் அமைதி பெற உணவில் கட்டுப்பாடு அமைத்துக் கொள்வது உண்டு. உணவையே ஏற்காமலிருக்கும் முழுப் பட்டினியிலிருந்து பால் பழம் போன்ற மனக்குழப்பம் தராத - மன அமைதிக்கு உதவும் உணவை ஏற்பது வரை, இதில் பல படித்தரங்கள் உண்டு. உபவாஸம் என்பர் இதை.

புற வாழ்வை ஒட்டி அகவாழ்வை அமைத்துக் கொண்டும் அகவாழ்வை ஒட்டிப் புறவாழ்வை அமைத்துக் கொண்டும் ஒன்றுக்கொன்று முரண்படாதவாறு வாழ்ந்து, ஆத்ம சாதனை புரிய வழிவகுக்கிருர் கண்ணன் கீதையில். அதில் இந்தச் சீரிய வாழ்க்கை முறையை யோகம் எனக் குறிப்பிட்டுக் கூறுகிருர்.

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चातिस्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ।
युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥ (६, १६-१७)

''பெருந்தீனி ஏற்பவனுக்கும் உணவே உண்ணாமல் பட்டினி கிடப்பவனுக்கும் ஆத்ம சாதனை அமையாது. எப்போதும் தூங்குபவனுக்கும் விழித்தே இருப்பவனுக்கும் ஆத்மசாதனை அமையாது. முறைப்படி உணவையும் நடவடிக்கைகளையும் புறச் செயல்களில் ஈடுபாட்டையும் தூக்கத்தையும் விழிப்பையும் அமைத்துக் கொண்டவனுக்குத்தான் ஆத்மசாதனை கஷ்டமின்றி எளிதாக சுகம் தரவல்லதாக அமையும்''. ஆகவே, யோக வாழ்க்கைக்கும் போக வாழ்க்கைக்கும் உடல் நிலையை ஒட்டிய மித உணவுதான் நல்லது. அமித உணவும் கடும் உபவாஸமும் பயன் தராது. கேடு விளைவிக்கவும் கூடும். அதனால் உபவாஸமும் அதன் எல்லையை மீறக்கூடாது.

ஜ்வரம் முதலியவற்றில் அஜீர்ணம் மிகுந்த நிலையில் ஓரிரு உணவு வேளைகளை உண்ணாமல் விட்டுப் பட்டினி கிடப்பது உண்டு. இதனை லங்கனம் என்பர். லங்கனம் - தாண்டுவது - ஒரு வேளை இரு வேளை தாண்டி உணவு ஏற்பதாகும். லேசாக ஆக்கிக் கொள்வது என்ற பொருளும் உண்டு. உணவைக் குறைப்பதால் உடல் கனம் - மப்பு கனம் குறைந்து லேசாகி விடும். இதற்கு உபவாசம் - பட்டினி என்று பொருள் கூறலாம். ஆனாலும் எந்த அளவில் உணவைக் குறைப்பதால் நோய்க் கனம்

குறையுமோ அதற்கு அதிகமாக உணவைக் குறைப்பது முறையல்ல. பட்டினி கிடக்கத் தகுதியற்றவர்கள் வேறு வகையிலும் லங்கனம் அமைத்துக் கொள்ளலாம் என்கிறார் சரகர்.

यत्किञ्चिल्लाघवकरं देहे तल्लंघनं स्मृतम्।
चतुष्प्रकारा संशुद्धिः पिपासा मारुतातपौ।
पाचनान्युपवासश्च व्यायामश्चेति लंघनम्॥

வைத்யர் மூலம் உள்ளே கனத்திருக்கும் மப்பை பேதி வாந்தி எனிமா முதலியவற்றால் குறைப்பது, நீர்வரட்சி ஏற்படும் போது அது தணியுமளவு நீர் பருகாமல், சிறிது சிறிது பருகி நீர் வேட்கையைப் பாதிக்காத அளவில் நீடிக்கவிடுவது, நல்ல காற்றுள்ள இடத்தில் தங்குவது, வெயில் கொள்வது, ஜீர்ணம் தரும் மருந்துகளைக் கொள்வது, உபவாஸம், தேகப்பயிற்சி இவை அனைத்துமே லங்கனத்திற்குப் பயன்படும் முறைகள் என்கிறார் சரகர். அதனால் உபவாஸம் இருக்கத் தகுதி இல்லாவிடில் மற்றவற்றைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

இந்த நாட்களில் முறையற்றுச் சாரமற்ற உணவு வகைகளையே உண்டு பழக்கமுள்ளவர்கள் பெரும்பாலும் இரைப்பையில் புளிப்புத் திரவச்சுரப்பு மிகுந்த அமில அதிகரிப்பால் நெஞ்செரிவு, வயிற்றுப்புண் முதலிய நோய்களால் கஷ்டப்படுகின்றனர். அதன்பின் அவர்கள் நெஞ்செரிவும் வலியும் ஏற்படும்போதெல்லாம் உணவேற்கிறார்கள். இந்த விஷ சக்கிரச் சூழ்நிலை - அமித உணவாலும், முறையற்று முன் உண்ட உணவு ஜீர்ணமாகு முன்னரே மறுபடி உண்பதாலும், உபவாஸமிருக்கப் பழகாமல் திடீரென உணவு வேளைகளைத் தாண்டி உண்பதாலும் ஏற்படும் கேடு.

உபவாஸம் முதலிய விரதங்களை முன்னிட்டு முழு பட்டினியிருக்க விரும்புபவர்கள் முதலில் அத்தகைய நாட்களில் உணவின் வகைகளைக் குறைப்பது, லகுவான ஆனால் பழக்கமான உணவை ஏற்பது, அதன் அளவைக் குறைப்பது, பிறகு பால் பழம் முதலியவற்றை ஏற்பது என்று சிறிது சிறிதாகக் குறைத்துப் பழகிப் பிறகு முழு பட்டினிக்குத் தம்மைத் தயாராக்கிக் கொள்வதுதான் நல்லது. அளவில் மிகக் குறைந்த உணவும் தொடர்ந்து பழகினால் அதுவும் நோய்க்கிடமே என்கிறார் சரகர்.

तत्र हीनमात्रमाहारराशिं बलवर्णोपचयक्षयकरं उदावर्तकरं अनायुष्यं अवृष्यं अनौजस्यं शरीरमनोबुद्धीन्द्रियोपघातकरं सारविधमनं अलक्ष्म्यावहं अशीतेश्च वातविकाराणामायतनं आचक्षते।

''உணவு அளவில் குறைந்தால் வலிவு, மேனி நிறம் இவை குறையும், மலமிறுகிக் கட்டும், எளிதில் மலம் வெளியேறுது. அதனால் குடலில் வாயு தங்கித் தடைபட்டு மேல் எதிர்த்துச் சத்தத்துடன் பரவும். ஆயுள் குறையும். ஆண்மை குன்றும். உடலின் சாரச் சேமிப்பு குன்றி அசதி, களைப்பு, சிறிது செயலாற்றினால் மூச்சுத் திணறுதல், பொறிகள் கலக்கம், எப்போதும் இனமறியாத வகையில் விஷயமின்றி வெற்று வெளியைப் பார்த்துச் சிந்தனை முதலியவை ஏற்படும். உடலும், மனமும், பொறிகளும், புத்தியும் பாதிக்கப் பெறும். ஆரோக்கிய ஒளி மங்கும். நரம்பு வியாதிகள் அனைத்தும் நேரும்'' இது ஹீநாசனம்.

இதே வகையில் அமித உணவும் கெடுக்கும். ஜீர்ண சக்திக்கு மேம்பட்டு உணவுப்பாதையில் உணவு ஸஞ்சரிப்பதால் ஜீர்ண உறுப்புகள் ஓயாமல் இயங்க நேரிடும். பெருமலப்போக்கு, ஜீர்ணமாகும் வேளையில் அசதி மிகுதி, ஸாரச் சேர்க்கை குறைவது, பலவீனம் என்று இதனைத் தொடர்ந்து வரும் நோய்கள். இது அமிதாசனம்.

உடலிற்கு ஒத்துக் கொள்வதையும் ஒவ்வாததையும் கலந்து உண்பதால் இரைப்பையும் குடலும் எளிதில் தன்னிலை தவறும். உணவுப் பாதை வலிவிழக்கும். இது ஸமசனம்.

முன் உணவு செரிக்குமுன்னரே திரும்ப உண்பது மற்றொரு தவறு. இரைப்பையில் அரை குறையாக ஜீர்ணமான உணவு நிற்கும் போது. அவை சிறு குடலில் முழுவதும் செலுத்தப்படாத நிலையில் மறுபடி உண்ணத் தொடங்கியதும் ஜீர்ண உணவும் அஜீர்ண உணவும் கலந்து மந்த நிலை ஏற்படும். இதனைத் தொடர்ந்து அஜீர்ண நோய்கள் பேதி, வாந்தி, இரைப்பை - குடலழற்சி முதலியவை தொடரும், இந்த உணவு முறை அத்த்யசனம்.

சிலருக்குப் பழக்க தோஷத்தால் அடிக்கடி அல்பப் பசி தோன்றும். அதனைத் திருப்தி செய்ய நடுநடுவே ஏதேனும் கொரிப்பதும், உணவு வேளையில் முழு உணவேற்பதும்

இவர்கள் பழக்கம். அல்பப் பசி என்பது வாயுவால் ஏற்படும் மனக்கோளாறு. இதனை வெல்ல முடியாமல் வேளை கெட்ட வேளையில் சிற்றுண்டியும் பேருண்டியும் கொள்வது விஷமாசனம்.

இந்த முறைகேடுகளைத் தவிர்த்து உண்பது நல்லது. முற்பகலிலும் முன்னிரவிலுமாக இரு வேளைகளில் உணவேற்பது நல்லது. சிறுவர்கள், வயதானவர்கள், நோயுற்றவர்கள், அதிக உடல் உழைப்பு உள்ளவர் காலை நடுப்பகல் முன்னிரவு என்ற மூன்று வேளைத் திட்டம் கொள்ளலாம். பகலில் இரு உணவு வேளைகளுக்கிடையே இடைவெளி குறையும். இரவு உணவிற்குப்பின் மறுநாள் காலை உணவு கொள்ளுவதற்கிடையே அதிக இடைவெளி அமையும். இந்த இடைவெளி அவசியத்தேவை.

''பகலில் முழுஉணவும் செரிக்குமுன்னரே நல்ல பசி ஏற்பட்டால் மறுபடி உணவு கொள்வதில் தவறில்லை. ஆனால் முன்னிரவில் கொண்ட உணவு செரியாதிருக்கும் போது காலை உணவு கொள்வது முறையல்ல. பகலில் சூர்ய ஒளி ஜீர்ணத்திற்கு உதவுகிறது. சூர்யனின் ஒளியால் இதயத்திற்குப் ப்ராணசக்தி அதிகம் கிட்டுகிறது. அதனால் எல்லாக் குழாய்களும் அதிகம் விரிவு பெறுகின்றன. தேகப்பயிற்சியும் உடல் உழைப்பும் தொடர்ந்து இருந்தால் உடற்சூடு நல்ல நிலையில் பாதுகாக்கப் பெறுகின்றது. மனம் சுறுசுறுப்புடன் பற்பலப் பணிகளில் ஈடுபடுகிறது. சுறுசுறுப்பான உடல் இயக்கங்களால் கதகதப்பான சூழ்நிலையில் தாதுக்களிலிருந்து பிரிக்கப்பட வேண்டிய மலப்பகுதிகள் பிரிக்கப்பட்டு மலத்துவாரங்கள் (வியர்வைக்கோளங்கள், சிறுநீரகம், மலக்குடல்) வழியே அடிக்கடி அகற்றப் பெறுகின்றன. அதனால் தாதுக்கள் மலக்கலப்பும் அழுகலுமின்றி புதுமையுடன் விளங்குகின்றன. இந்தச் சூழ்நிலையில் காலையில் உண்ட உணவு செரியாதிருக்கும் போதே மாலை உணவை ஏற்பதால் கெடுதி ஏற்படுவதில்லை. நன்கு காய்ச்சிய பாலில் நன்கு காய்ச்சிய பாலைக் கலப்பதுபோல். ஒன்றுடொன்று இணைந்து விடுகிறது''. என்கிறுர் வாக்படர்.

प्रातराशे त्वजीर्णेऽपि सायमाशो न दुष्यति ।
अजीर्णे सायमाशे तु प्रातराशो हि दुष्यति ॥

दिवा प्रबोध्यतेऽर्केण हृदयं पुण्डरीकवत् ।
तस्मिन्विबुद्धे स्रोतांसि स्फुटत्वं यान्ति सर्वशः ॥
व्यायामाच्च विचाराच्च विक्षिप्तत्वाच्च चेतसः ।
न क्लेदमुपगच्छन्ति दिवा तेनास्य धातवः ॥
अक्लिन्नेष्वन्नमासक्तं अन्यत्तेषु न दुष्यति ।
अविदग्धेष्विव पयस्स्वन्यत्संमिश्रितं पयः ॥

(அஷ்டாங்கஸங்கிரஹம்)

''ஆனால் இரவில் இதற்கு முற்றிலும் மாறுபட்ட சூழ்நிலை. பிராண சக்தியை சூர்யனிடமிருந்து பெற வழி இல்லை. பகலில் சேமித்த பிராண சக்தியை மிகக் குறைந்த அளவில் பங்கீடு செய்யும் முயற்சியில் இரவு தமோகுணம் எனும் திரையைப் போடுகின்றது. உலகிலும் உடலிலும் பெருமளவில் இயக்கங்கள் நிறுத்தப்படுகின்றன. உடலில் முக்கிய உறுப்புகளைத் தவிர மற்றவை ஓய்வு பெறுகின்றன. உணவுச் சத்து முதலியவற்றைக் கொண்டு செல்லும் குழாய்கள் சுருங்கி விடுகின்றன. சுறுசுறுப்பான உடலியக்கமில்லாததால் தாதுக்களிலிருந்து மலத்தைப் பிரித்து அகற்றும் செயலும் மந்தப்படுகிறது. அதனால் தாதுக்களில் தெளிவில்லை. உணவுப் பாதையும் மந்தமடைந்து செரிப்பதில் தாமதம் காட்டுகிறது. அந்நிலையில் காலையில் எழுந்தவுடன் முன்னிரவில் கொண்டது ஜீர்ணமானதான உணர்ச்சியுடன் நல்ல பசி இருந்தால் உணவேற்பதில் தவறில்லை. முன் இரவில் கொண்ட உணவு செரிக்கவில்லை என்பதை வயிற்றில் கனம், நாக்கில் சுறுசுறுப்பின்மை, பசி - ருசியின்மை முதலானவற்றால் உணர நேர்ந்தால் காலை உணவு உடன் கொள்ளாமல் பகலில் சூட்டாலும் சூர்ய ஒளியாலும் உடல் உழைப்பாலும் செரிப்பதைத் துரிதப்படுத்திப் பின்னர் உண்பதே நல்லது. இல்லாவிடில் காய்ச்சிய பாலில் முறையற்று அரைகுறையாகக் காய்ச்சிய பாலைக் கலந்தால் பால் முறிந்து விஷமிப்பது போல் உணவும் முறிந்து விஷமிக்கும்'' என்கிறார் வாக்படர் தொடர்ந்து.

रात्रौ तु हृदये म्लाने संवृतेष्वयनेषु च ।
परिक्लेदं यान्ति कोष्ठे संवृते देहधातवः ॥

क्लिन्नेष्वन्यदपक्वेषु तेष्वासिक्तं प्रदुष्यति ।
विदग्धेषु पयस्स्वन्यत्पयस्तप्तेष्विवार्पितम् ॥
नैशे तस्मादजीर्णेऽन्ने नान्यद्भुञ्जीत भोजनम् ।

முன் உண்ட உணவு ஜீர்ணமானதை அறிய

*முன் உண்ட உணவு ஜீர்ணமானதை எப்படி அறிவது ? ஜீர்ணமானதை அறிந்தபின்தான் உண்பது எனில் குடும்பச் சூழ்நிலை, அலுவலகச் சூழ்நிலை போன்றவை அதற்கு உதவ வேண்டுமே ? என்ற கவலை ஏற்படலாம். அன்ருட ஆரோக்கியம் பாதிக்கப்படாதவரை இந்தக் கவனம் குறைவதால் பெருத்த பாதகமில்லை. ஆனால் ஜீர்ண உறுப்புகளின் மந்தத்தால் நோய்வாய்ப்பட நேரும் என்ற எதிர்பார்வை உள்ள போது அதனை அறியாதிருப்பதும், அதனை மதிக்காமல் உண்பதும் மதியீனம் என்ற தலைப்பில் அடங்கும். அதனால் முன் உண்ட உணவு ஜீர்ணமாகிவிட்டது. இனி உணவேற்க இது இயற்கையான நேரம் என்பதனை அறிவது அவசியம். இதற்கும் ஒரு கோடி காட்டுகிருர் வாக்படர்.*

प्रसृष्टे विण्मूत्रे हृदि सुविमले दोषे स्वपथगे
विशुद्धे चोद्गारे क्षुदुपगमने वातेऽनुसरति ।
तथाऽग्नावुद्रिक्ते विशदकरणे देहे च सुलघौ
प्रयुञ्जीताहारं विधिनियमितः कालः स हि मतः ॥

*''இயற்கை உன்னை உணவேற்க அனுமதிக்கும் நேரம் பின் வருமாறு :-*

*1. மலமூத்திர வேகங்களின் இயற்கை உந்துதல் மதிக்கப்பட்டு அவை முழுவதும் வெளியேறிப் பெருங்குடல் பகுதி தடுக்குப் போல் அடங்கி நிற்கும்.*

*2. அதனால் மேல் வயிற்றில் உள்ள இறுக்கம் அழுத்தம் உப்புசம் முதலியவை தளர்ந்து பெருந்தடுப்புத்தசை (மஹா ப்ராசீரா - டயாஃப்ரம்) தளர்ந்து இதயப்பகுதியில் அழுத்தம் குறைவதால் இதய இயக்கம் தெளிவாக நடக்கும். ஜீர்ணத்தின் முதற்பகுதி நடைபெற்று விட்டதால் அன்னரஸப் பகுதியிலுள்ள கனம் குறைந்து, ரக்தத்தில் கலந்த அன்னரஸப் பகுதியும் பெரும்பாலும் ஜீர்ணமடைந்திருக்கும். அதனால் இதயத்தின் இயக்கம் லேசாகியிருக்கும். உண்ட உடன் இருந்த களைப்பும்*

அசதி, சோர்வு முதலியவையும் நீங்கியுள்ளதைக் கொண்டு இதனை அறியலாம்.

3. வயிற்றில் காற்றோட்டம் தடையின்றி நடைபெறும். உணவேற்றதும் தொண்டை நாக்கு முதலிய இடங்களில் கண்டிருந்த பிசி பிசிப்பு பூச்சு மறைந்திருக்கும்.

4. ஏப்பம் சுத்தமாக வரும். புளிப்புவாடை, எதுக்களிப்பு இருக்காது.

5. பசி சிறுகச் சிறுக வலிவடையும்.

6. வயிற்றில் காற்று எதிர்த்து வராமல் கீழ்நோக்கில் வெளியாகும். எதிர்த்து வந்தால் சிறு குடலில் உணவு செரிக்காமல் தடையாக நிற்பதென உணரலாம்.

7. வயிற்றில் உணவு சேர்ந்தால் ஜீர்ணமாகிவிடும் என்ற நம்பிக்கை தரும்படி ஜீர்ணத்திரவச் சுரப்பு உணரப்படும்.

8. கண் காது மூக்கு முதலிய பொறிகள் தெளிந்து நிற்கும்.

9. உடல் லேசாகி இருக்கும். இதுவே தக்க நேரம்.''

மிகச்சிலரே இந்நிலையை உணர்ந்து உணவேற்க இன்று வாய்ப்பு பெறுவர். இது ஒரு லக்ஷ்ய வாழ்வின் அடையாளம். அதுவும் தெரிந்திருக்க வேண்டும். இந்தக் காலவரையை மீறுவதும் தவறு. அப்போது சுரந்த ஜீர்ணத்திரவங்கள் வேலையில்லாததால் அடங்க முற்படும், அதன்பின் சாப்பிட செரிக்காது. அடுத்த வேளை உணவில் தூண்டுதல் குறையும். வயிற்று உப்புசம், படபடப்பு, களைப்பு அதிகமாகும்.

### ஜீர்ணசக்தி என்பது என்ன ?

உட்செல்லும் உணவை உடலுக்கேற்றதாக மாற்றி உடலின் பகுதியாக அமைப்பதே ஜீர்ணசக்தி. அத்தனை பணமும் ஜீர்ணம் என்று குறிப்பிடுகிறோம். பிறர் பணம் என்று பிறர் நினைக்க முடியாதபடி தன்னுடையதாக்கிக் கொண்டு விட்டான் என்பதே அதன் பொருள். உணவை அன்னச்சத்தாக மாற்றுவதுடன் நிற்காமல் அதனை ரக்தமாக, தசையாக, எலும்பாக உடலிலுள்ள ஒவ்வொரு பகுதியாக மாற்றும் சக்தி இது. வெளிப்பொருளான உணவை - உடலாக மாற்றும் திறமை இதற்கு உண்டு. இதனைப் பொதுவாக அக்னி - தேஹாக்னி என்பர். இதில் உணவை அன்னச்சத்தாக - ரஸமாக மாற்றும் சக்தியுள்ளதை ஜாடராக்னி (ஜடரம் -வயிறு, இரைப்பை முதல் பெருங்குடல் வரை உள்ள

பகுதி, அதில் உள்ள சூடு) என்பர். அன்னச்சத்தை அந்த அந்த உடற்பகுதியாக மாற்றுவதை தாத்வக்னி என்பர். (தாது - உடலின் மூலப்பொருள்கள்- (1) ரஸம் - அன்னத்தின் ஸாரம் (2) ரக்தம், (3) மாம்ஸம் (தசையாக உருப்பெறவிருப்பது) (4) மேதஸ் - கொழுப்பு, (5) அஸ்தி - எலும்பாக மாறவிருப்பது, (7) மஜ்ஜா - எலும்பினுள் உள்ள சாரப்பொருள் (8) சுக்கிரம். ஆண் பெண் இருபாலரின் உடலில் உள்ள இனப் பெருக்கச்சத்து. இவை ஏழும் தாதுக்கள்.

நீரில் நெருப்பு என்ற சொல் வழக்கு உண்டு. எதிர்பாராத இடத்தில் தோன்றும் பொருளை இப்படிக் குறிப்பிடுவர். மேகத்தின் இடையே தோன்றும் வைத்யுத அக்னி - மின்னல், கடலின் இடையே கடலே அளவு மீறாமல் காக்கும் பாடவாக்னி, வயிற்றில் நீர்க்கசிவின் இடையே உள்ள ஜாடராக்னி என்ற இந்த மூன்றும் நீரில் நெருப்புகள், இந்த அக்னிக்கு ஆதாரம் நீர். செயலால் நெருப்பென ஊகிக்கிறோம். தோற்றத்தில் நீராகவும் செயலில் நெருப்பாகவும் இருப்பவை. நெருப்பின் தன்மைகளில் ஒளி - எரிப்பு என்ற இரண்டு மின்னலிலும், வற்ற வைப்பது வாடவாக்னியிலும், பக்குவமடையச் செய்வது ஜாடராக்னியிலும் காணப்படும். நெருப்பின் எல்லாத் தன்மைகளையும் உணர முடியாமல் ஒவ்வொன்றில் ஒன்று அல்லது சில தன்மைகளை மட்டும் உணர முடியும். ஜாடராக்னியின் - தன்மை நீரில் ஒளிந்துள்ளது. அதனால் ஜீர்ணத் திரவங்களையே ஜாடராக்னி என்ற மேல் எழுந்தவாரியான கணிப்பு. அதற்கும் மீறிய சில தனிச்சிறப்புகளை ஆயுர்வேதம் கூறும்.

ஜாடராக்னி - நெருப்பின் தன்மை

நெருப்பிற்கு ஆசிரயாசன் என்ற பெயர் உண்டு. தான் பற்றிய - தன்னைத் தாங்குகிற - பொருளையே உண்பவன் எனப்பொருள். கொழுந்து விட்டெறியும் நிலைக்கு வளர்ந்ததே அப்படிச் செய்யும். அதன் பலமற்ற நிலையில் பெரு விறகை அதன்மேல் போட அது அணைந்து விடும். விறகின்றியும் அணைந்து விடும். பருவத்து சீத உஷ்ண நிலைகளும் அதனைப் பாதிக்கும். ஈரப்பசையற்ற சூழ்நிலையில் காற்றோட்டமிருந்தால் நன்கு எரியும். தான் பற்ற வேண்டிய விறகு ஈரமற்றிருந்தால் எளிதில் பற்றும். காற்றோட்டம் குறைய, ஈரவிறகு கிடைக்கப் புகையும், அணையும்.

வயிற்றின் நெருப்பும் அப்படியே, நன்கு பலமுடன் தூண்டப்பட்ட நிலையில் எதனையும் உணவாக்கிக் கொள்ளும். நன்கு தூண்டப் பெறாத நிலையில் வயிற்றில் காற்றோட்டத் தடை உள்ள நிலையில் அது உணவைப் போட்டவுடன் மந்தித்து விடும். அதற்குப் போதுமான உணவு அளிக்காவிடில் உடலையே விறகாக்கிக் கொள்ளும்.

## லகுவும் குருவும்

உணவுப் பொருள்களில் இரு வகை உண்டு. சில எளிதில் ஜீர்ணமாகும். நெருப்பிற்குச் சிராய், சத்தை, ஓலை போன்றவை இவை. லகு என இவற்றைக் குறிப்பிடுவர். (நன்கு பழகிய அரிசி, கொள்ளு, பொரி, கைப்பு துவர்ப்பு மிக்கவை இதனுள் அடங்கும்) சில செரிக்கத் தாமதமாகும். அவை குரு. புளிய விறகு, நிலக்கரி போன்றவை இவை. (மாப்பண்டங்கள், இனிப்பானவை, நெய்ப்பு மிக்கவை இதனுள் அடங்கும்.) இயற்கையாக லகுவாகவோ குருவாகவோ அமைந்தவைகளைப் பக்குவ முறையில் மாற்றிவிடலாம். அரிசிச்சாதம் லகு, அதையே சர்க்கரைப் பொங்கலாக்கினால் குரு. மாப்பண்டம், குரு. கோதுமையால் ரொட்டி செய்து நெய்ப்பு சேர்க்காமல் நெருப்பில் போட்டு வாட்டிப் பக்குவப்படுத்திய (சூக்கா) ரொட்டி லகு.

லகுவான உணவையே பழக்கிக் கொண்டவனுக்கு சிறிது குருவான அன்னமும் திணறச் செய்யும். குருவான உணவையே பழக்கிக் கொண்டவனுக்கு லகுவான உணவு வயிற்றில் உணவு போதாமை நிலையை உண்டாக்கி வயிற்றில் புண், புளிப்பு மிகுதி முதலிய நிலைகளை ஏற்படுத்தும். கவனத்திற்குரியது இது.

உடற்பயிற்சியை முறைப்படித் தொடர்ந்து செய்பவர். உடல் உழைப்பு மிக்கத் தொழிலில் ஈடுபடுபவர். இயற்கையாகவே நல்ல சரீரபலமுள்ளவர் இவர்களுக்கு அக்னி பலம் சீராக இருப்பதால் குருவான உணவும் எளிதில் செரிக்கும். சோம்பியிருப்பவர். உடல் பலக் குறைவுள்ளவருக்கு லகுவான உணவும் செரிக்கத் தாமதமாகலாம்.

பருவ நிலைக்கேற்பு இந்த அக்னிபலம் மாறுவதுண்டு. பனி நாட்களில் வெளிக்குளிர் சரீரத்தின் அக்னி பலத்தை உட்புறமாகத் திருப்பி விட ஜீர்ணகோசங்கள் சுறுசுறுப்புடன் இயங்கும். பசி நன்கு எடுக்கும். மார்கழி மாதத்தில் விடியற் காலையிலேயே பசி மும்முரமாக இருப்பதால் கனத்தஉணவான

பொங்கல் தனிச் சிறப்புணவாக வழங்கப் படுகிறது. மழை காலத்தில் உட்தாபமும் குறைந்து வெளித்தாபமும் குறைவதால் வயிறு மந்தம், காலரா பேதி முதலியவை வரும் பருவம். அப்போது மிதமித உணவே ஏற்றது. கோடை காலத்திலும் காற்று காலத்திலும் வெளிச்சூட்டுடன் உட்சூடும் கலந்து பரவித் தணிந்து விடுகிறது. பசி இருந்தும் அதிக உணவு ஏற்க முடியாத பருவம் அது.

சிலருக்கு உடல்வாகு காரணமாக பசி மிக்கதாகவோ, குறைவாகவோ உணரப்படும். பசி உணர்ச்சியையே அறியாத சிலரும் உண்டு. அவர்கள் வேளைக்குச் சாப்பிடுவர். வயிற்றில் கனக்குறைவு. பசிக்களைப்பு முதலியவற்றைத் தெள்ளென இவர்கள் புரிந்து கொள்ள முடியாது. சிலருக்கு இயற்கையாகவே ஜீர்ணசக்தி கூடுதலாகவும், சிலருக்குக் குறைவாகவும் இருக்கும். இது தேகப்பிரகிருதி எனும் உடல்வாகைப் பொறுத்தது. சிலருக்குச் சில சமயம் அதிகமாகவும், சில சமயம் குறைவாகவுமிருக்கும். இப்படித்தான் என நிர்ணயிக்க இயலாதபடி விஷமம் ஆக இருக்கும். இதுவும் கவனிக்கத் தக்கதே.

குழந்தைப் பருவம், இளமை, முதுமை என வளரவளர அக்னி சக்தியும் மாறுபட்டுக் கொண்டே இருக்கும். தான் வசிக்குமிடம் மாறுவதால் ஜீர்ண சக்தி மாறுவதுண்டு. ஓரிடத்தில் ஜீர்ணமாகும் அதே உணவு மற்றோரிடத்தில் ஜீர்ணமாகாது. ஜீர்ணசக்தி வளரவும் குறையவும் அந்தந்தச் சூழல்கள் உதவுகின்றன. சமுத்திரக்கரை, சதுப்பு நிலங்கள், நீர்தேக்கம் அதிகம் உள்ள இடங்களில் ஜீர்ணமாகாத உணவு, வரண்ட காற்றோட்டம் மிக்க இடங்களில் எளிதில் ஜீர்ணமாகக்கூடும்.

இப்படிக் காரியகாரண ரீதியில் புலப்படும் அளவிலும், இவைகளுக்குட்படாமல் புலப்படாதவாறும், அவனவனது அக்னிபலம் மாறக் கூடும். இதற்கு ஒரு மானி - அளவுகோல் கிடையாது. அவனவன் தானே உணரக்கூடிய சில குறிப்புகளை வாக்படர் தந்ததை - முன் கண்டோம். சர்க்கரையிலுள்ள இனிப்பு போல் அனுபவ வாயிலாக மட்டும் அறியத் தக்கது. அதனால் கீழ்க்கண்ட ஒரு திட்டத்தை வகுத்துக் கொள்ளலாம்.

अन्नेन कुक्षेर्द्वावंशौ पानेनैकं प्रपूरयेत् ।
आश्रयं पवनादीनां चतुर्थमवशेषयेत् ॥

என வாக்படர் காட்டும் வழி. 'வயிற்றின் கொள்ளளவை ஊகித்துக் கொள். அதில் பாதியை கன உணவாலும் கால் பங்கை குடிநீர் லேசான நீர்த்த உணவு முதலியவற்றாலும் நிரப்பு. காற்று ஓடுவதற்கும் எல்லாம் எளிதில் நகர்வதற்கும் கால்பங்கை மீதமாக வைத்து விடு'' கன உணவு அளவிலும் மற்றொரு கட்டுப்பாட்டைத் தருகிறார் வாக்படர்.

गुरूणां अर्धसौहित्यं लघूनां नातितृप्तता ।
मात्रा प्रमाणं निर्दिष्टं सुखं यावद्विजीर्यति ॥

குருவான உணவென அனுபவத்தால் கண்டறிந்ததை அரை வயிறு நிரம்பு மட்டும், அதாவது உணவேற்ற முழு த்ருப்தியின் பாதி அளவில் நிறுத்தி விடு. லகுவான உணவாயின் முழு திருப்தி வருவதற்கு முன்னரே நிறுத்திவிடு. இந்தப் பாதி திருப்திக்கும் முழுத் திருப்திக்கும் அளவு என்ன ? இனி வேண்டாம் என்று இலையை மறைத்துக் கொண்டு குனிந்து கைகளை ஆட்டுவது முழு த்ருப்தி, இதற்குப் பாதி ? ஊகித்துக் கொள்ளலாம். குருவான உணவாயின் ஜலாம்சத்தின் தேவை அதிகம். இரைப்பை அரவைக்கு அதிகக் கொள்ளளவு தேவை. அதனால் பாதி அளவு நிரம்பினால் தான் எளிதில் ஜீர்ணமாகும் என்கிறார்.

கீழும் செல்லாமல் மேல் வழியே வெளியேறவும் முடியாமல் கட்டை போல் அடைத்துக் கொண்டு திணறும்படி - அரவைக்கும் நெகிழ்விற்கும் இடம் இல்லாமல் திணறும் நிலை அலஸகம் - இரைப்பை இரை தின்ற மலைப்பாம்பு போல் அசைவற்றிருக்கும் நிலை மிகக் கெடுதல். இந்த நிலை ஏற்படும்படி கன உணவை அளவுக்கு மீறி ஏற்கக்கூடாது. எளிதில் ஜீர்ணமாகும் அளவே அளவு.

உணவு ஜீர்ணமாக உதவுபவை

உணவு எளிதில் ஜீர்ணமாக உதவுபவை ஆறு. இவற்றில் ஒன்று குறைந்தாலும் தாமதம் அதிகமாகும். சரியாக ஜீர்ணமும் ஆகாது.

1. ஊஷ்மா - இரைப்பை முதலியவற்றின் உட்சூடு: பக்குவம் செய்ய சூடு இன்றியமையாதது. இந்தச் சூடு இயற்கையாக இரைப்பை முதலியவற்றின் இடைவிடாத அசைவினால் பாதுகாக்கப் பெறுகிறது. பெரும்பாலும் கன உணவைச் சூடாகவே ஏற்பர். கடுகு மிளகு மல்லி மிளகாய்

முதலிய தீபனப் பொருள்கள் இந்தச் சூடு குறையாமல் காக்கின்றன. மிகக் கனத்த உணவானாலும், தாமதித்து நேரம் தாண்டி உண்டாலும், இயற்கையாக அக்னிபலம் குன்றியிருந்தாலும் வென்னீர் பருக இந்தச் சூடு பலம் பெறுகிறது. குளிர்ந்த பானம் உணவு ஜீர்ணமாவதைத் தடுக்கும். மிகக் குளிர்ந்த பானம் செல்லும் பாதையின் உணர்வையும் அசைவையும் குறைத்து உமிழ்நீர் முதலான ஜீர்ணத் திரவங்கள் சுரப்பதைத் தாமதிக்கச் செய்யும். இந்தக் குளிர்ச்சி இரைப்பையின் உட்சூட்டால் மாறத் தாமதமானாலும் மாறுவிட்டாலும் கேடு விளைகிறது. அதனால் கன உணவேற்கும் போது மிகக்குளிர்ந்த பானங்கள் நல்லதல்ல.

சில குழந்தைகள் மிகக் குளிர்ந்த பானங்களைப் பருகப் பிடிவாதம் பிடிக்கும். நெஞ்சில் கபக்கட்டுள்ள குழந்தைகள் உடன் சுவாஸ நோயால் கஷ்டப்படும். தாய்மார்கள் குளிர் பானத்தையும் தந்து உடன் சூடான காபி முதலியவற்றையும் தந்து தன்னையும் குழந்தையையும் திருப்தி செய்து கொள்வது உண்டு. குளிர்ச்சியும் சூடும் அடுத்தடுத்துச் சாப்பிடுவதால் வரும் கேடு, பழச்சாறும் காபியும் என கூட்டுச் சேராத விஷமிக்கும் பானங்களின் தொடர்ச்சி, இவை குழந்தையின் எதிர்ப்பு சக்தியைக் குறைத்து விடும். தக்க உபாயங்களைக் கையாண்டு குளிர் பானங்களைத் தவிர்க்கச் செய்வதுதான் நல்லது.

2. வாயு காற்று ஸஞ்சாரம் - இடைவெளியிருக்கும் வகையில் இரைப்பையை நிரப்புதல் அவசியம். இடைவெளி இல்லையேல் நெகிழ்ந்த உணவு கீழ் இறங்காது. காற்று எளிதில் இடம் விட்டு இடம்மாற வாய்ப்பிருந்தால் உணவும் இடம் மாறும். லகுவான உணவும் இடம்மாற இடமில்லாதிருந்தால் தேங்கிப் புளித்து நோய்க்கு இடம் தரும்.

3. க்லேதம் - திரவக்கசிவு. கன உணவு பலவகை. கடித்துமென்று சாப்பிடக் கூடியவை, தேங்காய், மாப்பண்டங்கள் எண்ணெய்யில் பொறித்த பக்ஷணங்கள் முதலியவை. ஸத்துமா போன்று உமிழ்நீர் சேர்க்கையால் நெகிழ்ந்து உட்சென்றவை. இவை வரண்ட உணவு. திரவமிக்க உணவும் சில. இவைகளைச் சேர்த்து உண்ணும்போது உணவின் இறுகல்கள் நெகிழ்ந்து கூழ் போன்ற நிலை பெறும்போதுதான் ஜீர்ணத் திரவங்கள் ஒரே சீராகப் பரவி அவற்றை பக்குவப்படுத்த முடியம். இதற்குப் போதுமான திரவமும், திரவத்தால் கூழ் போன்ற நெகிழ்ச்சியும்

ஏற்படாவிடில் உணவு ஜீர்ணமாகாமல் கனத்துக் கல் போலாகி வேதனை தரும். இதற்கானத் திரவத்தைச் சிறிது சிறிதாக உணவின் தன்மைக்கேற்பச் சூடாகவோ, உடற் சூட்டளவிலோ சாப்பிட வேண்டும். அதிகத் திரவம் ஜீர்ணத் திரவத்தை நீர்க்கச் செய்யும். அப்பொழுது ஜீர்ணமாகாது. திரவக் குறைவும் ஜீர்ணத்திற்குத் தடையாவதுடன், வாயுத்தங்கல், தடை உணர்ச்சி, விக்கல் கமறல், ஏப்பத்தடை, கீழ்வாயுத்தடை முதலியவைகளை ஏற்படுத்தும்.

4. ஸ்நேகம் - நெய்ப்பு - வயிற்றில் வாயு தடைபடாதிருக்கவும், இரைப்பை முதலியவற்றின் சவ்வின் மேல் பாதிப்பு ஏற்படாதிருக்கவும் மென்மை ஏற்படவும் நெய்ப்பு தேவை. இவை நெய் முதலியவற்றால் கிட்டுகிறது. நெய்யும் எண்ணெய்யும் நேரிடையாகச் சேர்க்க முடியாத நிலையில் கூட, தயிர், எள்ளு, தேங்காய் முதலியவற்றைச் சேர்ப்பதால் கிட்டுகிறது. நெய்ப்பின்றி செல்லும் உணவும் ஜீர்ணத்திற்குக் கெடுதலே.

5 . காலம் - நேரம் - உணவிற்கேற்றபடி ஜீர்ணமாக நேரம் ஒதுக்கப்பட வேண்டும். ஒருமணி முதல் ஆறுமணி நேரம் வரை இரைப்பையில் ஜீர்ணமாகும் பொருள்கள் உண்டு. அததற்கான அவகாசம் தராமல் மேன் மேலும் உணவு கொள்ள நோய் வருகிறது. ஜீர்ணத்திரவம் எத்தனை வலிவிற் சிறந்ததாயினும் நேர ஒதுக்கீடும் அவசியமாகிறது.

6. ஸமயோகம் - உணவின் சீரிய அமைப்பு - எட்டு முக்கியமாகக் கவனத்திற்குரியவை என முன் குறிப்பிட்டவற்றையும் கவனிக்கவும். இந்த ஆறும் கவனிக்கத் தக்கவை என்கிறுர் சரகர்.

आहारपरिणामकरास्त्विमे भावा भवन्ति, तद्यथा, ऊष्मा, वायुः, क्लेदः, स्नेहः, कालः, समयोगश्चेति। ऊष्मा पचति। वायुरपकर्षति। क्लेदः शैथिल्यमापादयति। स्नेहो मार्दवं जनयति। कालः पर्याप्तिमभिनिर्वर्तयति। समयोगस्त्वेषां परिणामधातुसाम्यकरः संपद्यते।

உணவுப் பொருள்கள்

மனிதனது உணவு பற்றித்தான் இங்கு சிந்திக்கிறோம். தேசவாரியாக உணவாகக் கொள்ளப்படும் பொருள்கள் அனந்தம், அவற்றில் சிலவற்றைப் பற்றி மட்டும் இங்கு விளக்குகிறோம்.

பனஞ்சர்க்கரை கல்கண்டு பற்றிப் பனே என்ற தலைப்பில் முன் குறிப்பிட்டுள்ளது கவனிக்கத் தக்கது.

தேன் கெட்டியாகிச் சர்க்கரையாவது உண்டு. இது நெய்ப்பைக் குறைத்து வரட்சி தரும். வாந்திபேதியில் நல்லது. நாவரட்சி எரிவு இவற்றைக் குறைக்கும்.

வெல்லம் சர்க்கரை இவற்றைச் சென்ற 20 — 25 ஆண்டுகளை விட இன்று அதிக அளவில் பயன் படுத்துகின்றனர். காபி டீ முதலிய பானங்கள், குளிர் பானங்கள் மூலம் சர்க்கரை அம்சம் உடலில் அதிகம் சேர்கின்றது. முன்பு ஆறு மாதத்திற்குள் செலவான சர்க்கரை இன்று ஒரே வாரத்தில் செலவாவதுடன் இதற்கும்மேல் சர்க்கரைத் தட்டுப்பாட்டை வெளிப்படையாகக் காண்பதும் கண்கூடு. செல்வக் கொழிப்பு நோய்கள் எனக் குறிப்பிடப்படும் நீரிழிவு, ரத்த அழுத்தமிகுதி, மாரடைப்பு, ஓரளவு கான்ஸரும் கூட இந்த சர்க்கரை அதிகம் பயன்படும் சொகுசான வாழ்க்கை முறையின் பின் விளைவு என்றே கருதுகின்றனர். சரகர் ஆஸ்யா ஸுகம் அதிகநேரம் சுகமாக ஒரே நிலையில் அமர்ந்திருப்பது - ஸ்வப்னஸுகம் - குஷன் படுக்கையில் அதிக நேரம் படுத்திருப்பது. ததி — தயிர் அதிக அளவில் இனிப்பாய் சேர்ப்பது. க்ராம்ய ஆனூப ஔதக ரஸம்- ஆடு கோழி சதுப்பு நிலங்கள் நீர் நிலைகள் இவற்றிலுள்ளவற்றின் மாமிச உணவு - குடவைக்ருதம்) வெல்லம் சர்க்கரையாலானவை. இவைகளின் அதிக உபயோகம் நீரிழிவு முதலியவற்றிற்கு முக்கியக் காரணம் என்கிறார்.

சர்க்கரை முதலிய இனிய பொருள்கள் உடலில் விளைவிக்கும் ஆபத்தைப் பற்றி நவீன ஆராய்ச்சி பின்வருமாறு விளக்குகிறது.

ஒருவர் சர்க்கரை அதிகம் உட்கொண்டால் சர்க்கரை நோய் வரும் என்பது சரியில்லை. ஒருவரது கணையம், நல்ல முறையில் இயங்கித் தகுந்த அளவு இன்சுலின் அவருக்குக் கிடைக்குமாயின் அவர் அளவுக்கு மீறி சர்க்கரை உட்கொண்டாலும் அவருக்கு சர்க்கரை நோய் (Diabetes melitius) வராது. ஒரு வேளை அவரது சிறுநீரில் சிறிது சர்க்கரை வெளிப்படலாம். இது டயபிடிஸ் அல்ல. இதற்கு (Alimentary Glycousuria) என்று பெயர். இதனால் அதிகத் தீங்கு இல்லை. ஆயினும் சர்க்கரை நோய் ஏற்கனவே உள்ளவர்கள் சர்க்கரை உட் கொள்ளாவிடில் நலம்.

அப்படியாயின் நாம் அளவுக்குமீறி சர்க்கரை உட்கொள்ளலாமா ? கூடாது. ஏனெனில் அதிக அளவு சர்க்கரை உடலினுள்கொழுப்புச்சத்தாக மாறி விடுகிறது. உடல் பருமன் உளளவர்கள். பருமனைக் குறைக்க உணவில் கொழுப்பை மட்டும் குறைத்தால் போதாது. சர்க்கரை உண்பதையும் குறைக்க வேண்டும்.

சர்க்கரை இரத்தத்தில் கொழுப்பு அணுக்களை அதிகரிக்கிறது. உணவில் 70 கிராம் சர்க்கரை அதிகமாக உட்கொண்டால் அவரது இரத்தத்தில் கொழுப்பு அணுக்கள் 70 மில்லி கிராமலிருந்து 98 மில்லி கிராம் (சதவீதம்) வரை அதிகப்படுத்துகிறது. உடலில் சர்க்கரையே கொழுப்பாக மாறக்கூடும். இரண்டாவதாக அதிக அளவு சர்க்கரை உட்கொள்ளும்போது அதிக அளவு இன்சுலின் சுரந்து, உடலில் கொழுப்பு தேங்கிக் கிடக்கின்ற சில தசைகளிலிருந்து (adipose tissue) கொழுப்பு பிரிக்கப்பட்டு இரத்தத்தில் கலக்கும்.

இரத்தத்தில் கொழுப்பு (Triglycerides) அதிகமாவது நல்லதல்ல. ஏனெனில் இந்தக் கொழுப்பு அணுக்கள் இரத்தக் குழாய்களில் குறிப்பாக மூலதமனியில் படிந்து அவைகளின் சுவர்களைத் தடிக்கச் செய்யலாம். இதனால் இரத்தக் குழாயின் உள் சுற்றளவு குறைந்து இரத்த ஓட்டம் தடைபட்டு அதனால் மாரடைப்பு நோய் ஏற்படலாம்.

''இரத்தக் குழாய்களின் சுவர் தடிக்க, கொலஸ்டிரால் என்ற மற்றொரு பொருளும் காரணம். சர்க்கரை உடலில் கொலஸ்டிராலை அதிகரிக்கும்.

''உயிரியல் இரசாயனிகள், கொழுப்பு அணுக்களும் கொலஸ்டிராலும் சேர்ந்து லிப்போ ப்ரோட்டீன் என்று மாறும் என்பார்கள். ஆகவே எப்பொழுது இரண்டும் மாறுகிறதோ, அதிகப்படுகிறதோ அப்பொழுது இரத்தத்திலுள்ள லிப்போ ப்ரோட்டீனும் அதிகரிக்கும். எங்ஙனம் கொலஸ்டிரல் மட்டும் இரத்தக் குழாய்ச் சுவர்களைத் தடிக்கச் செய்கிறதோ அப்படியே அதிக அளவு லிப்போ ப்ரோட்டீன்களும் செய்யும்.''

''மாரடைப்பு நோயால் இறந்தவர்களின் உணவு நிலையைக் கவனித்தால் அவர்கள் அதிக அளவு சர்க்கரை உட்கொண்டதாகத் தெரிகிறது. வேறு காரணங்களும் இருக்கக் கூடும்''

இவை ஆராய்ச்சியில் கண்ட முடிவுகள். அதிக அளவு சர்க்கரை இரத்தத்தில் லிப்போ புரோட்டீனை அதிகரிக்கிறது. இருதய நோயால் இறந்த பலர் அதிக அளவு உட்கொண்டிருக்கிறார்கள். ஆகவே சர்க்கரைக்கும் இருதய நோய்க்கும் ஏதோ நிச்சயம் ஒரு ஸம்பந்தம் இருக்கிறது. புகை பிடிப்பது. அதிக அளவு காப்பி குடிப்பது, சாராயம் குடிப்பது இந்தப் பட்டியலுடன் அதிக அளவு சர்க்கரை உண்பதையும் இருதய நோய்க்குக் காரணமாகக் கூறலாம் "அதிக அளவு" என்பதை முக்கியமாக கவனிக்க வேண்டும். வேண்டிய அளவு சர்க்கரையினால் கெடுதல் இல்லை. அது கொழுப்பாக மாறுது.

ஒட்டகத்தின் உடலில் கடைசியில் வைக்கப்படும் வைக்கோல் கூட ஒட்டகத்தை கீழே வீழச் செய்யலாம். அதே போல் இருதய நோய்க்குப் பல காரணங்களில் ஒன்றாக அதிக அளவு சர்க்கரை உண்பது இருப்பதால் அதுவே "கடைசியாக வைக்கப்படும் வைக்கோலாக" ஆகலாமல்லவா ? ஆகவே தகுந்த அளவு சர்க்கரை உடலுக்கு ஆரோக்கியம். அதிக அளவு சர்க்கரை நாவிற்கு என்னவோ இனிப்புத்தான். ஆனால் உடலுக்கோ ?

இன்றைய உணவில் சர்க்கரை மட்டும் இனியதல்ல. இட்டிலி முதலிய மாப்பண்டங்களும் கிழங்கு வகையும் இனிதாக இம்சை செய்ய வல்லதே.

சர்க்கரைக்குப்பதில் உணவுப்பொருளாகச் சேர்க்கப்பெற்று வரும் சில கெமிகல் பொருள்கள் செயற்கைச் சர்க்கரையாகப் பயன்படுத்தப் படுகின்றன. குளிர்பானங்களாகக் குப்பிகளில் நிரப்பி விற்கப்படுபவைகளில் இவை அதிகம் சேர்க்கப்பெறுகின்றன. இவை அதிக அளவில் மிக்வும் கேடு விளைவிப்பவை.

தேன் : பூவின் மகரந்தத்திலிருந்து உருப்பெறுவதால் இது தாவர இனப்பொருளாகும். கொசு, தேனீ, வண்டு முதலியவற்றால் சேர்க்கப்பட்டு அவற்றின் எச்சிலால் உருப் பெறுவதால் இது உயிரினப் பொருள் ஆகும். இதனை உற்பத்தி செய்யும் தேனீ, பூ, பருவம் முதலியவற்றால் குணவேறுபாடு இருக்கும். எனினும் பொதுவாக வரட்சி தரும். உடலில் அதி நுட்பமான பகுதிகளிலும் எளிதில் ஊடுருவிப் பாய்வதால் சிறந்த ரஸாயனப் பொருள். சீக்கிரத்தில் ஜீர்ணமாகும். பசியைத்

தூண்டும். உணவைச் செரிக்கச் செய்யும். உடலிற்கு அழகு, பொலிவு, வலிவு, புஷ்டி, சூடு, போகசக்தி தரும் ஜீவ சத்துள்ள உணவுப்பொருள்.

தேன், உள்புண், வெளிப்புண்ணை ஆற்றிப் புண் வாயை மேடிடாமலும் பள்ளமாகாமலும் பாதுகாக்க வல்லது. இது பல மருந்துகளுக்குப் பொதுவான அனுபானமாகத் தரப்பெறுகிறது. அந்தந்த மருந்தின் தன்மையை எளிதில் உடலில் பதிய வைப்பதில் சிறந்ததானதால் சிறந்த அனுபானம். தேன் புதிதானால் நல்ல பலம் தரும். உடலைப் பருக்கச் செய்யும். தேன் பழையதானால் உடலில் கொழுப்பைக் கரைத்து எடையைக் குறைக்க வல்லது. வாய்ப்புண்ணை ஆற்றவல்லது. கண்ணிற்கு மைபோலிட மனக் கலக்கத்தைத் தெளிவிக்கும். கண்ணிமை கனத்தையும் தலைகனத்தையும் குறைக்கும். தலைவலியைக் குறைக்கும்.

தேன் உடல் பருத்திருப்பவருக்கு ஏற்ற பானமாகும். ஜலத்தில் தேனை விட்டுக் காலை வேளைகளில் சாப்பிட உடற்சூடு மிகுந்து கொழுப்பு கரைந்து வெளியாகும். சூடான வென்னீருடன் கலந்து சாப்பிட வாந்தியாகும்.

**ஆரோக்கியத்திற்கான சில தேன் பிரயோகங்கள் :** மது மேகிக்கு (நீரில் சர்க்கரை உள்ளவனுக்கு)த் தினமும் காலையில் தேன் சேர்ப்பது நல்லது. இனியதனைத்தும் தவிர்க்க வேண்டிய நிலையிலும், தேன் இனியதாயினும் இது கெடுதல் செய்வதில்லை.

பசி அளவிற்குமீறி ஏற்படும் நிலையில், பசி தோன்றியதும் உணவேற்காவிடில் புண் என்ற பயம் உள்ள நிலையில் தேன்மெழுகு முற்றிலும் அகற்றப்படாத ஆடையுடன் உள்ள தேன் அடிக்கடி சாப்பிடுவது நல்லது. இரைப்பையினுள் ஜவ்விற்குத் தேனில் கலந்த தேன் மெழுகு பூச்சாகி எரிவு புண்வலி முதலியவற்றைக் குறைக்கும்.

ரொட்டி சத்துமா முதலிய வரண்ட உணவுகளுடன் தேன் சேர்த்துச் சாப்பிடுவது உடலுக்குப் புஷ்டி தரும். காட்டிலுள்ளவர் விருந்தோம்பலுக்கு இதனைப் பயன்படுத்துவர். தேனும் தினைமாவும் அவர்களுக்கு உயர்ந்த விருந்துப் பொருள். உடல் கனத்தைக் குறைக்க விடியற்காலையில் தேனும் ஜலமும் பருகுவது நல்லது. உடல் காங்கை குறையக் காய்ச்சிச் சூடு ஆறிய பாலுடன் தேன் கலந்து சாப்பிடுவது உபகாரம். தேனைச் சுடவைத்தோ,

சூடான, பொருளுடனோ சாப்பிட வெகுட்டல், வாந்தி ஏற்படுத்துமாதலால் உடற் சூட்டிற்கு அதிகப்படாத சூட்டுடன் உள்ள பொருளுடன் சாப்பிடுவதே ஏற்றது. உடல் பருக்கத் தேனை ஆடைத் தயிருடன் சாப்பிடுவது நல்லது.

இஞ்சியைச் சிறு துண்டுகளாக்கித் தேனில் ஊறப்போட்டு வெயிலிலிட்டு வைத்திருக்கலாம். நல்ல பசி தூண்டி. கடினமான உணவையும் எளிதில் செரிக்கச் செய்யும். வயிற்று உப்புசம், வயிற்றில் கனம், பசிமந்தம், அசதி, தலைசுற்றுதல், மனத்தெளிவின்மை நீங்கும். ஜலம் கலக்காமல் இடித்துப் பிழிந்த இஞ்சிச் சாற்றைத் தெளியவைத்துத் தேன் சம அளவு கலந்து இளந்தீயில் பக்குவம் செய்து பானகமாகவோ, நீர்சுண்டிய பதத்தில் முரப்பாவாகவோ தயாரித்து வைத்துக் கொள்ளலாம். இவற்றில் குங்குமப்பூ, ஏலம், ஜாதிக்காய் முதலியவற்றால் மணம் கூட்டலாம். தேனையும் இஞ்சிச் சாற்றையும் கலந்து பீங்கான் அல்லது கண்ணாடி ஜாடியிலிட்டு துணியால் வேடுகட்டி வெயிலில் பலநாட்கள் வைத்திருக்க இஞ்சிச் சாற்றின் நீர்ப்பகுதி சுண்டித் தேனில் இஞ்சியின் அம்சம் நன்கு கலந்து நிற்கும். இந்தத் தேன் உணவில் ருசி கூட்ட வல்லது. ஜீரகம் சோம்பு மிளகு திப்பிலி முதலியவற்றைத் தேனில் ஊரவைத்துத் பாதுகாத்து, அவ்வப்போது ஒவ்வொன்றாக மென்று சாப்பிடலாம். மிளகு உடல் வாயு வலியைக் கண்டிக்கும். திப்பிலி சளியை அகற்றும். சோம்பு வயிற்று வாயுவை நீக்கும். ஜீரகம் செரிக்கச் செய்யும். நெல்லிக்காய் வலிவைத் தரும்.

நெல்லிக்காய் பச்சையாகக் கிடைக்கும் நாட்களில் முதிர்ந்த காய்களை அடிபடாமல் மரத்திலிருநது பறித்து இறக்கிக் கழுவி உலர்த்தி எடுத்து வெள்ளிக் கம்பி, எவர்சில்வர் கம்பி, கருவேலம்முள் அல்லது திடமான தென்னம் ஈர்க்கால் 5—6 சிறு பொத்தல்கள் இட்டு ஈரமில்லாத மண்பாண்டம், பீங்கான் அல்லது கண்ணாடி ஜாடியில் இட்டு அவை மறையும் அளவு தேனை விடவும். பாத்திர வாயைத் துணியில் மூடி வெயிலில் இடவும். தேனில் நெல்லிக்காய் நன்கு ஊறியதும் ஈரமில்லாத சுத்தமான ஸ்பூன்களின் உதவியால் கைபடாமல் அதிலுள்ள விதைகளை அகற்றி விடலாம். இதனை அடிக்கடி வெயிலில் வைத்து வெகு நாட்கள் பாதுகாக்கலாம். சிறந்த உடல் வலிவுதரும் உணவும் மருந்துமாகும்.

காங்கை மிக்க உடல் வாகுள்ள குழந்தைகள் உடல் மெலிந்து காணும். உடல் புஷ்டியடையாது. எப்போதும் சிடுசிடு என்றிருக்கும். நல்ல பசுநெய் அல்லது எருமை நெய் 50 மிலி லிடர். தேன் 25 மிலி லிடர் இரண்டையும் கலந்து வைத்துக் கொண்டு 1/4 — 1/2 ஸ்பூன் அளவு தினம் 3—4 வேளை இரு உணவு வேளைக்கு இடையே கொடுத்து வர உடல் புஷ்டி அடையும். வலிவுண்டாகும். காங்கை சிடுசிடுப்பு நீங்கும். 1— 2 மாத சிசுக்களுக்குக் கூட அவ்வப்பேது 3—4 சொட்டு நெய்யும் 1—2 சொட்டு தேனும் மத்தித்துக் கொடுக்கச் சிசு ஆரோக்கியமாக வளரும். தேனும் நெய்யும் சம அளவில் சேர்ப்பது தவறு. நெய்யின் அளவில் தேன் பாதி இருந்தால் போதுமானது.

**தேன் கலப்படம் :** கரும்பஞ்சாற்றைக் காய்ச்சித் தேன் என விற்பதுண்டு. வெல்லப்பாகும் இதில் சேரும்.(Synthetic Artifical Honey என வியாபாரத்தில் தேன் என்ற பெயரில் விற்பதுண்டு.) பழக்கமுள்ள நாக்கு வித்யாசத்தைக் கண்டு பிடித்து விடும். கரண்டியிலிட்டுக் காய்ச்சினால் தேன் ஆனால் இளகி நீர்க்கும். பாகானால் கெட்டியாாகும். ஆற வைத்தால் தேன் பழைய நிலையை அடையும். வெல்லம் இறுகிக் கனப்பாகாகி விடும்.

**தேன் சுத்தி :** தேனில் உள்ள ஆடை அழுக்கை அகற்ற — அதனை முதலில் மெல்லிய துணியில் வடிகட்டி வாயகன்ற பாத்திரத்தில் இட்டு இதனை ஒரு நீர் நிரப்பிய பாத்திரத்தில் இட்டு அடுப்பிலேற்றிக் காய்ச்சவும். தேன்மேல் படரும் அழுக்கை அகப்பையால் அகற்றி வரலாம். மெழுகும் மற்ற அழுக்கும் இதனால் அகன்றுவிடும்.

**தேனும் விஷம் :** சூடாக இருக்கும் போது சாப்பிடக் கூடாது. ஜ்வர தாபம் மிகுந்த நிலை. கடும் வெயிலில் காய்ந்திருக்கும் போது, வெயில் நேரத்தில் சாப்பிடுவது நல்லதல்ல. மணத்தக்காளிக்காய் அல்லது கீரை. தக்காளி இவற்றுடன் சாப்பிடக்கூடாது. அதிக அளவில் அடிக்கடி சாப்பிட்டால் செரிக்காது. வயிறு கனக்கும். மழைநீர் நேரிடையாகப் பிடித்துச் சாப்பிட அமிருதம் போன்றது. ஆனால் அத்துடன் தேன் சேர்த்துச் சாப்பிடக்கூடாது. தனித்துத் தேனும் நெய்யும் சம அளவில் சாப்பிடக்கூடாது. பால் பழரஸம் தயிர் முதலியவற்றுடன் கலந்து விடும் போது தேனும் நெய்யும் சம அளவிலிருநதாலும் பாதகமில்லை.

தேன் சிறந்த மருத்துவத்துணை : இதயம், சுவாசகோசம், கல்லீரல், கண், தோல், சிறுநீரகம் பற்றிய நோய்களில் மருந்துக்கு முக்கிய அனுபானமாக ஏற்க நல்லது. விக்கல், காஸம், சுவாசம் பேதி, வாந்தி, மூலம், ரத்தவாந்தி ரத்தக்கடுப்பு, ரத்தபேதி, குடல்புண் இவற்றில் நல்லது. புளிக்காத கடைந்தமோர், பழரசம் நெல்லிக்காய்ச்சாறு இவற்றில் ஒன்றுடன் தினந்தோறும் தேன் சாப்பிட்டுவர ரத்தக் கொதிப்பு சமனமாவது கண்கூடு.

தேன் மெழுகு : தோலின்மேல் தேய்க்கத் தோல் வரட்சி அகலும். புண்ணை ஆற்றும். தேன் மெழுகை அனலில் வாட்டித் தேங்காய் எண்ணெய் சமஅளவு கலந்து இளக்கி உடலின்மேல் ஒத்தடம் கொடுக்க வலி நீங்கும். தேங்காய் எண்ணெய் அல்லது நல்லெண்ணய் ஆறு பங்கு எடுத்து சுட வைத்து அதில் ஒரு பங்கு தேன் மெழுகைப் போட இளகிக் களிம்பு போலாகும். இதனைக் கால் வெடிப்பிற்குத் தடவ வலி வரட்சி பிளவு குறையும். தேன் மெழுகை மிளகளவில் சிறு சிறு துண்டுகளாக்கி அனலில் போட்டு வரும் புகையை முகரச் சளி வெளியாகும். பீனஸம் எனும் மண்டைச்சளி (ஸைனஸ்) வேதனை அகலும். தேன் மெழுகு கலந்த பிண்டதைலம் ரத்த ஒட்டத்தடையுடன் கால்களில் வரும் வீக்கம் பிடிப்பு முதலியவற்றில் தடவ மிகச்சிறந்த தைலம்.

உப்பு — உணவிற்குச் சுவையூட்டுபவைகளில் உப்பு முதலில் இடம் பெறுகின்றது. நாவில் உமிழ்நீரை அதிகமாகப் பெருக்கி உணவுப் பொருளை நெகிழ்த்தி நீர்க்கச் செய்கிறது. இரைப்பையிலுள்ள அமிலநீரை வலுப்படுத்தி உணவைச் செரிக்கச் செய்கிறது. கபத்தாலும் வாயுவாலும் வழியிலுள்ள தடைகளை அகற்றி உணவுப்பாதையில் உணவை நெகிழ்தலுடன் கடக்கச் செய்கிறது. உப்பில்லாமல் மற்றவை செரித்துச் சத்துப் பிரிந்து உட்சேர்வது சிரமம். அதனால் உப்பில்லாத பண்டம் குப்பையில் என்பர். உப்பு இந்தியாவில் ஐந்து வகையாகக் கிடைக்கிறது. அதில் முக்கியமானவை இரண்டு. (1)கடலுப்பு — (2) பாறை உப்பு (3) கடலுப்பை, லவண்ம் என்பர். பாறை உப்பை இந்துப்பு ஸைந்தவம் என்பர். கடலுப்பைவிடப் பாறைஉப்பே குணத்தில் சிறந்தது கடலுப்பில் நீர்க்கும் சக்தி அதிகம்.

இந்துப்பு — பஞ்சாபிலும் ஸிந்து (பாகிஸ்தான்)விலும் இது கனிப்பொருளாக வெட்டி எடுக்கப்படுகிறது. வெண்ணிறமுள்ளதும் செந்நிறம் கலந்த வெண்ணிறமுள்ளதுமாக

இரு வகை உண்டு. ருசி, பசி தரவல்லது. கண்ணிற்கு நல்லது. வயிற்றில் புளிப்பை அதிகப் படுத்தாதாகையால் புளித்த ஏப்பம், எரிவுடன் உள்ள பித்தா ஜீர்ணத்தில் உதவும் அருசி, அஜீர்ணம், வயிற்றுவலி. மலக்கட்டு இவற்றில் நல்லது. 3 பங்கு குளிர்ந்த ஜலத்தில் முழுவதும் கரையும்.

கடல் உப்பு — இது தென்னிந்தியக் கடல் ஓரங்களிலும் குஜராத் கத்தியவார் பகுதிகளில் அதிகம். உப்பளங்களில் தயாராகிறது. இந்துப்பின் குணங்கள் கொண்டதெனினும் கசப்பும் கரிப்பும் மிக்கது.

வளையலுப்பு என்ற பிடலவணம் என்பது நவச்சாரம். ஸுவர்சலே உப்பு எனும் உப்பு கந்தகமணத்துடன் காணும் கந்தக வெடியுப்பு. இதில் மற்றொரு வகை வெடியப்பு. உவர் மண்ணிலிருந்து கிடைக்கும் ஔத்பிதலவணம். பஞ்சாபிலுள்ள ஸாம்பர் ஏரியிலிருந்து கிடைக்கும் ஸாம்பர் உப்பு அதிகம் வெடிப்புள்ள மணமுள்ளவையானதால் பெரும்பாலானவரால் உணவுப் பொருளாகக் கொள்ளப்படுவதில்லே அதிக அளவில் கடலுப்பும் மருத்துவ நோக்கில் இந்துப்பும் மட்டுமே இன்று உணவாகக் கொள்ளப்படுகின்றன.

வீக்கம் வலி உள்ள இடங்களில் உப்பை வறுத்து ஒத்தடம் கொடுப்பதுண்டு உப்பு கரைந்த வென்னீரால் ஒத்தடம் கொடுப்பதுமுண்டு. தொண்டை வலி — வீக்கத்தில் உப்புநீரை வாயிலிட்டுக் கொப்புளிப்பதுண்டு. வாயு விரைப்பு இருந்தால் உப்பு வென்னீரில் குளிப்பது இதம்.

க்ஷாரங்கள் — யவக்ஷாரம் — யவையின் தாள்களைச் சுட்டெரித்த சாம்பலிருந்து எடுத்த உப்பு, யவக்ஷாரம் பொடாஷியம் க்ளோரைடு) பொடாஷியம் ஸல்ஃபேட், பொடாஷியம் பைகார்பொனேட், பொடாஷியம் கார்பொனேட் ஆகிய பொடாஷியம் உப்புகளின் கலவையான ஆல்கலி இது. கீல்வாயு, அம்லபித்தம் எனும் ஹைபர் ஆஸிடிடி. வயிற்று வலி உப்புசம் சிறுநீர் சுருக்கு, கல்லடைப்பு முதலியவற்றில் கஞ்சியில் போட்டுச் சாப்பிடச் சொல்வர். சிறுநீரை அதிக அளவில் பெருக்கும். மிகக்குறைந்த அளவில் சில நாட்களுக்கு மட்டுமே உபயோகிக்க ஏற்றது.

ஸர்ஜக்ஷாரம் — சோடா உப்பு — சிறு காஞ்சூரி என்ற செடியைச் சுட்டெரித்த எடுத்த உப்பு இது. இன்று செயற்கையாகப் பெருமளவில் தயாரிக்கப் பெறுகிறது. யவக்ஷாரத்தைப் போல் இது பயன்படும். ஆனால் இது ஸோடியம் பிரிவைச் சேர்ந்தது.

ஜலவர்க்கம் — உணவாகுபவையும் பானமாகுபவையும் வானிலிருந்து மழையாகப் பொழியும் நீர்மூலமாகவே உடலில் சேரும் தகுதியைப் பெறுகின்றன. உடலின் பெரும் பகுதி நீராகும். தூயதும் எல்லோருக்கும் பயன்படுவதுமான தொன்றைத் தைவமாகவும் தாயாகவும் கருதுவது இந்திய மரபு. பசுவைத் தெய்வம் என்றும் கோமாதா என்றும் பேணுவதைப் போல் காவிரி போன்ற ஜீவ நதியை காவிரித்தாய் எனவும் காவிரி அம்மன் எனவும் வணங்குவர். நதியைத் தாய் எனக் கருதுவதன் அடிப்படையில் ஆற்றுப் பெருக்கால் வளம்பெறும் தேசத்தை நதீமாத்ருகம் எனவும் கூறுவர். வானம் பார்த்த சீமையை தேவமாத்ருகம் என்பர். தூய்மையும் அமைதியும் இனிமையும் நிறைந்த நீரைக்கண்டதும் உள்ளத்தில் ஏற்படும் அமைதியும் ஆனந்தமும் பக்தியும் பரிவும் காரணமாக நீர்த் தேக்கங்களையும் நதிகளையும் புனித ஸ்தலமாகக் கொள்வர். வேதம் நீரை அம்ருதம் எனவே அழைக்கும். ஜீவனம் (வாழவைப்பது) என்றே அதற்கு மற்றொரு பெயரும் உண்டு. தண்ணீரை பேஷஜம் (உடலே வருடி இதம் தந்து வேதனையைக் குறைக்கவல்லது) என்றும் வேதம் கூறும்.

ஆன்றோர் திருத்தலங்கள் என்று கருதும் ஒவ்வொரு இடத்திலும் ஒரு புண்ய தீர்த்தம் இருக்கும். நீர்த் தேக்கங்களில் மேற்பகுதி விஷபாகம் என்றும், நடுப்பகுதி பூதபாகம் என்றும் அடித்தளத்திலுள்ள பகுதி அமுதபாகம் என்று பாகுபடுத்துவர். நீர்ப்பரப்பாகக் காணும் மேற்பகுதியில் நீரில் கரைந்த விஷச்சத்துக்கள் அதிகம் காணும். நடுவில் உள்ளது உடல் வளர்ச்சிக்கு உதவும் பூதபாகம். நீர்த் தேக்கத்தில் அடிப்பகுதியிலுள்ள நீரே அமுத பாகமானதால் மிகத் தூயதாகும். புண்ய தீர்த்தங்களிலுள்ள நீரில் விஷக்கலப்பு இல்லாமல் அமுதபாகமே பெரிதும் காணப்படும் என்று ராமலிங்க அடிகளார் முதலிய பெரியோர்கள் கூறுவர். அமுதபாகம் எப்பொழுதும் ஒரே சீராக அதிகமாக இருப்பதற்குக் காரணம் இவை அமைந்தத்

தலவிசேஷமும் அவற்றை ஏற்படுத்திய மஹான்களின் அருள் நோக்கும் தான். இன்று சில புண்ய தீர்த்தங்கள் தூய்மை நிரம்பிக் காண்கின்றன. பலவற்றை மக்களும் அரசாங்கமும் சமுதாயமும் தனித்தும் சேர்ந்தும் அசுத்தக்கலப்பின் ஒரே இடமாக அவைகளை மாற்றி விட்டதால் சீர்கெட்டுவிட்டன. மக்கள் நீரையும் நீர்த்தேக்கத்தையும் ஆற்றையும் தெய்வமெனத் தாயெனப் போற்றி வாழ்ந்த பண்பு இன்று உலகாயதவாதத்தால் மறைந்து ஆரோக்கியத்திற்குப் பாதகமாக விளைந்து விட்டது.

நீரைப்பருக ஒரு பாத்திரத்தில் ஜலத்தை மீண்டு எடுத்துச் சிறிது வைத்திருந்து மேற்பகுதியில் சிறிது நீரைச் சாய்த்தகற்றிப் பின்னரே நீர்பருகுவதை இன்று மிக வயதான கிராமத்தினரிடையே காணலாம். அதற்குக் காரணம் ஜலத்தின் மேற் பகுதியிலுள்ள விஷப்பகுதியை அகற்றும் பழக்கம் தொன்று தொட்டு வருவதில் அவர்களும் ஊறியிருப்பதே. புண்ணிய தீர்த்தங்களைப்போல் ஜீவ நவதிகளான காவிரி கங்கை யமுனை முதலிய ஆறுகளும் தூயநீர் கொண்டவையே. எனினும் சூழ்நிலையில் விஷக்கலப்பு ஏற்படும் வாய்ப்பு இன்று அதிகம். ஆதலால் இந்த புண்ணிய தீர்த்த ஜலமும் புனிதம் (தூய்மை) கெட்டிருக்குமென்ற ஐயமிருந்தால் காய்ச்சிச் சாப்பிடுவது நல்லது.

தூய நீர் — தெளிந்த சுத்தமான ஜலம் ஆரோக்கியத்திற்கு இன்றியமையாதது. கலங்கிய ஜலத்தில் ஸ்நானமும் அதைக் குடிப்பதும் உடல் கனத்து நீர் கோர்த்துக் கொண்டு நோய்வாய்ப் படுத்தக் காரணமாகின்றன. இயற்கையாகத் தெளிந்த சுத்தமான நீர் மழை ஜலமே. ஜலம் மழையாகப் பூமியை அடையு முன்னரே அதை ஏந்தி நல்ல சுத்தமான கண்ணாடி அல்லது பீங்கான் ஜாடிகளில் நிரப்பி வைத்துக் கொள்ளலாம். இதற்கு ஹம்ஸோதகம் — கங்காஜலம் — என்று பெயர். கங்கை நதியின் ஜலமும் மழை ஜலமும் எத்தனை நாள் வைத்திருந்தாலும் கெடாது. அதை நோயுள்ளபோது முக்கியமாக கடும் ஜ்வரம். உடல் எரிச்சல், நீர்சுருக்கு உஷ்ணவாயு, மயக்கம் ரத்தக்கொதிப்பு முதலிய நோய்களில் பருகுவது நல்லது.

நல்ல மழை நாட்களில் வெட்ட வெளியில் சிலந்தி கூடு கட்டாத பகுதிகளில் மழை ஆரம்பித்த 5 — 10 நிமிஷங்களுக்குப் பின் வாயகன்ற பீங்கான் அல்லது ஈயம் பூசிய பாத்திரத்தில் தூய

வெள்ளைத் துணிபோட்டு மூடி மழை பெய்யுமிடத்தில் வைத்திருந்து ஜலத்தைச் சேகரிக்க வேண்டும். இந்த ஜலத்தில் வெந்த அன்னம். இதில் ஊறிய அன்னம் கொசகொசக்காது. வேறு எந்த மாறுதலேயும் அடையாது.

பூச நக்ஷத்ரத்தில் இதைச் சேகரிப்பது சிறந்தது. இந்த நக்ஷத்ரம் ஜலத்தைத் தெளிய வைத்து அமிர்தமயமாக்கும் என்பர். ஔஷதம் ஜாஹ்நவீதோயம் என்று இதையே மருந்தாகக் கொண்டு நோய் நீங்கி சுகம் பெற்றவர் பலர்.

இவ்வளவு தூய்மையான மழை ஜலமும் பூமியை அடைந்த பின்னர் மண்ணின் தன்மைக்கேற்ப நிறத்திலும் கனத்திலும் சுவையிலும் மாறுகிறது. நல்ல மணற்பாங்கான பூமியில் அதிக மாறுபாடு அடைவதில்லே. களிமண் — செம்மண் பாங்கான பூமிகளில் கலங்கி நிற்கும். தானே தெளிய சில நாட்களாகும். பூமிப் பரப்பில் காய்ந்த நிலேயில் செயலாற்றத் தகுதியற்றுள்ள நோய்க் கிருமிகள் அழுக்குகள் மழை ஜலத்தில் கரைந்து ஆறுகளில் கலந்து ஆங்காங்கு நீர் தேக்கங்களில் சேர்கின்றன.

வானத்தின் தென் மண்டலத்தில அகத்திய நட்சத்திரம் புரட்டாசி நடுப்பகுதியில் தோன்றி வைகாசி நடுப்பகுதி வரை காணும். மழை பொழிந்து ஓய்ந்ததும், நீர் தேக்கங்களில் சேர்ந்துள்ள நீர் இந்த நக்ஷத்ரத்தின் உதயத்திற்குபின் இதன் ஒளியில் தானே தெளிகிறது. கடலின் நீர்மட்டம் உயராமல் நீர்வற்றி ஒரே நிலையிலிருப்பது இந்த நக்ஷத்ரத்தின் சக்தியால் என்கிறார் வராஹமிஹிரர்.

உதயே முநேரகஸ்த்ய நாம்ந: குஸமாயோக மலப்ரதூஷிதானி
ஹ்ருதயாநி ஸதாமிவ ஸ்வபாவாத் புநரம்பூனி பவந்தி நிர்மலானி

என்று ஜலம் தெளிவது அகஸ்திய நக்ஷத்ரத்தால் தான் என வராஹஸம்ஹிதை கூறுகிறது. மழை காலத்திற்குப்பின் வானம் தெளிவாகித் தெளிந்து நிற்கும். ஐப்பசி கார்த்திகை மாதங்களில் பகலில் சூர்யனின் கிரணங்கள் ஜலத்தைச் சூடாக்கித் தெளியவைக்கும். இரவில் சந்த்ரனின் கிரணங்கள் அதைச் சில்லிடச் செய்து தெளியவைக்கும். அகஸ்திய நக்ஷத்ரத்தின் ஒளி அதை விஷமற்றதாக்கும். ஆகவே இக்காலத்தில் விடியற் காலையில் நீர்த் தேக்கத்திலிருந்து தெளிந்த நீரை சேகரித்துத் தினசரி உபயோகிக்கும்படி கூறுகிறார் வாக்படர்.

தப்தம் தப்தாம்சுகிரணை: சீதம் சீதாம்சுரச்மிபி:
ஸமந்தாதப்யஹோராத்ரம் அகஸ்த்யோதயநிர்விஷம்
சுசி ஹம்ஸோதகம் நாம நிர்மலம் மலஜித்ஜலம்.
நாபிஷ்யந்தி ந வாருஷம் பானாதிஷ்வம்ருதோபமம்

செயற்கையாகத் தெளியவைத்த ஜலத்தைவிட இயற்கை கால பலத்தால் நன்கு தெளியவைத்து அமிருதமாக்கி நமக்கு ஜலத்தைத் தருகிறது.

ஐப்பசியிலும் கார்த்திகையிலும் ஆகாயம் நிர்மலமாயிருக்கும். சூர்ய சந்த்ர கிரணங்களும் தடையின்றி பூர்ண சக்தியுடன் நம்மேல் படும். சரத்காலச் சந்த்ரன் என இக்காலத்தில் நிலவைக் கொண்டாடுவர். சூர்யனும் சந்த்ரனும் நக்ஷத்ரமும் தம் அமிருத ஒளிகளால் ஜலத்தைச் சுத்தமாக்குகின்றனர். அகஸ்திய நக்ஷத்ரம் உதயமாவது சூர்யன் ஹஸ்த நக்ஷத்ரத்தில் ஸஞ்சரிக்கும் போது. அஸ்தமனமாவது ரோஹிணீ நக்ஷத்ரத்தில் ஸஞ்சாரத்தின் போது.

வேறு வகையிலும் வானிலிருந்து நீரைப் பெறுகிறோம்.

காரம் — ஆலங்கட்டி நீர் அல்லது கல்மாரி. ஸௌர்ய வெப்பத்தினால் மேற்கிளம்பும் நீராவி. அங்கேயே அதிக க்குளிர்ச்சியினால் பனிக்கட்டியாக உறைந்து விடுகிறது. மறுபடியும் ஸௌர்ய வெப்பத்தால் பாதி இளகி ஆலங்கட்டி மழையாகப் பொழிகின்றது. இது கோடை காலத்தில் நிகழக்கூடியது. அதிகக் கடுமையாக வெய்யில் உள்ள ப்ரதேசங்களில் அதிகமாய் ஏற்படுகிறது. மழை பெய்யும் பொழுதே. இப்பனிக் கல்துண்டுகளைச் சேகரம் செய்து, சுத்தமான பாத்திரத்தில் வைத்தால் இளகி நீராகி விடும். வடிக்கட்டி சுத்தமான கண்ணாடிக்குப்பிகளில் காப்பாற்றி உபயோகிக்கலாம். இதுவும் குணம் நிறைந்தது. சொல்லுகிறார் பதார்த்தகுணசிந்தாமணிக்காரர் :—

"வெண்மாசி மேகமுடன் வீறும் பெரும்பாடு
கண்மாசி காந்தல் கடிதகற்றும் — தண்மீறும்
விக்கல் சுவாஸமுடன் மெய்மயக்க மும்போக்கும்
கக்குமாலங்கட்டி காண்"

ஸ்த்ரீகளுக்கு ஏற்படும் வெட்டை வெள்ளை பெரும்பாடு மாதவிடாய் ரத்த பெரும்பாடு நோய்களில் உள்ளுக்கு

தனியாகவும். மருந்துக்கு அனுபானமாகவும் கொடுத்தால் சீக்கிரம் வியாதி சமனமாகும். பொதுவாக உடல் வெப்பம் தணிந்து குளிர்ச்சி அடையும். விக்கல் உடனே நிற்கும். களைப்பு.சோர்வு, மயக்கம், சிரம சுவாஸம் நீங்கும். கண்ணிற்படியும் பீளை போகும், கண்ணெரிச்சலும் போகும்.

தௌஷாரம் — பனிநீர் — பனி காலத்தில் பகலில் எழுப்பும் நீராவி, ராத்திரியில் குளிர்ந்து விடியற்காலையில் நீர்த்துளிகளாக மாறி பூமியில் விழும். மார்கழி, தை மாதங்களில் புற்களின் மேல், வாழையிலைகளில் நிரம்பப் பார்க்கலாம். பனிநீர் தேவையானால், வெள்ளை மெல்லிய துணியை புல்தரையின் மீது ராத்திரி விரித்துவைத்து, காலையில் சூர்யோதயத்திற்கு முன்பு எடுத்துப் பிழிந்து எடுக்கலாம். ஆனால் அதிகம் சேகரிக்க இயலாது. ஆனால் இந்தப் பனி நீருக்கு வியாதிகளைப் போக்கப் பிரத்யேகக் குணம் இருக்கிறது கவனிக்கத்தக்கது.

''பனிச்சலத்தை யெல்லுதயம் பானஞ்செய் வாரைத்
தனஞ்சொறிசி ரங்குட்டந் தாபம் — தனி வாதம்
முத்தோட நீரிழிவு மூடழல்கி ராணி யிவை
கொத்தோடு தாழ்ந்தகலுங் கூறு

ப. கு. சிந்தாமணி

உதய காலத்தில் பனி நீரைப் பருகுவதால், பலவித தோல் வியாதிகள், ரத்த — பித்த வாத ரோகங்கள், கிரஹணீ, ரோகம், வாந்தி பித்த எரிச்சல் தாபம் இவைகள் போகும். மேலுக்குத் தேய்ப்பதாலும் தவளைச் சொரி நீங்கும்.

ஹைமம் — பனிக்கட்டி நீர் : தௌஷாரம் — உறையாத பனிநீர். ஹைமம் உறைந்த பனிக்கட்டி நீர் என்று வித்யாஸம். ஹிமாலயம் போன்ற பிரதேசங்களில் பனி பாறை பாறையாக உறைந்து விடும். வெப்பம் பட்டு, உருகி, ஜலம் வரும். இது கனத்தும் சிறிது கலங்கியும் இருக்கும். ருசியாகவும் குளிர்ச்சியாகவம் இருப்பினும் உடலில் மூன்று தோஷங்களையும் கோவிக்கச் செய்யும். நல்லதல்ல. கலப்படம். அதிகம்.

ஆற்றில் புதுநீர் பெருகத் தொடங்கிச் சுமார் ஒரு மாதம் வரை அப்படியே பருக ஏற்றதல்ல. ஆற்றின் புதுநீர்ப் பெருக்கில் கரைந்த விஷமலங்கள் அகலஅத்தனை நாள் தேவை. அதன் பிறகும்

மழையால் கரைந்த பூமிமலங்கள் ஜலத்தில் வந்து கொண்டுதானிருக்கும். ஆற்றின் மணலும் சூர்ய வெப்பமும் எத்தனை தெளியவைத்தாலும் போதாது. ஜலத்தை வீட்டிற்குக் கொணர்ந்த பின்னரும் அதைத் தெளியவைத்தே சாப்பிட வேண்டும்.

மண்வாடையுடன் கலந்திருக்கும் ஜலம் உடல் கனம், அசதி தோல் வரட்சி, அரிப்பு, குளிர் ஜ்வரம், விஷஜ்வரம், சீதபேதி வயிற்றுக்கடுப்பு, வயிற்றுவலி, காலரா முதலிய கடும் இரைப்பை குடல் நோய்களுக்கு இலக்காக்கும். பாதுகாப்புள்ள நீர்த்தேக்கங்கள் மூலம் குழாய்கள் வழியே ஜலம் பெறும் வாய்ப்புள்ள நகரங்களில் ஜலக்குறைவுள்ள கோடையிலும் புதுநீர் வரும் காலத்திலும் ஜலத்தில் கலந்துள்ள நோய்க் கிருமிகளைப் போக்க க்ளோரின் என்ற கடும் சுத்திப் பொருளைச் சேர்ப்பர். இது சிறிது கூடினால் ஜலம் நாறும். வயிற்றில் வேக்காளம் இதனாலும் அதிகமாகும். இந்த ஜலத்தை நன்கு காய்ச்சி ஆறவைத்தபின் உபயோகிக்க ஓரளவு இந்த அனர்த்தம் குறையும்.

புதிய நீரைத் தெளியவைத்துக் காய்ச்சிக் குடிப்பதுதான் ஏற்ற முறை. சில மண்வாகு காரணமாக ஜலம் எத்தனை தெளியவைத்தாலும் சட்டெனத் தெளியாது. தேற்றான் கொட்டையை ஜலம்விட்டுக் கல்லில் உரைத்து ஜலத்தில் கலக்க உடன் ஜலம் தெளியும். ஒரு குடம் நீருக்கு ஒரு தேற்றான் விதையில் வீசம் பங்கு கரைத்தாலே தெளிவேற்படுத்தப் போதுமானது. அதிக அளவில் கலந்தால் சிலருக்கு வயிற்றைப் புரட்டும். 10 — 15 தடவை ஜலத்தில் இழைத்துக் கலப்பதே வழக்கம். தேற்றான் இரைப்பை குடல் நீர்குண்டிக்காய் நீர்த்தாரை இவைகளின் வேக்காளத்தில் நல்ல மருந்து. தேற்றானால் தெளியவைத்த ஜலம் நல்ல ஆரோக்கியம் தரக்கூடியது. காங்கையால் பலக்குறைவுள்ளவர்களுக்குத் தேற்றான் விதை சேர்ந்த மருந்து கொடுப்பதுண்டு. தேற்றான் கொட்டையிட்டுத் தேற்று மைந்தரை என்பர்.

படிக்காரத்தைத் தூள் செய்து 5 — 10 அரிசி அளவு ஒரு குடம் ஜலத்திலிட ஜலம் தெளியும். விலாமிச்சை வேருக்கும் ஜலக் கெடுதியைப் போக்கும் குணம் உண்டு.

ஆற்றில் ஜலம் குறைந்துள்ள நாட்களிலும் குடிநீர் பாதுகாப்பு திட்டம் அமைந்துள்ள நகரங்களில் கூட, ஜலம் சுத்தமாக இருப்பதற்கில்லை. குளங்கள் ஓடைகள் போன்று நீர் தேக்கங்களில் இந்நாட்களில் அசுத்தக் கலப்பிற்கு அதிக இடம் உண்டு. வயல் வெளிகளிலிருந்து வடிகாலாக வரும் சிறு வாய்க்கால்களின் நீர் கலக்கும் போதும் இவ்விதம் நீர் தேக்கங்களின் தூய்மை கெடுகிறது. ஆறு குளம் பாதுகாப்பு பெற்ற குடிநீர்க் கிணறுகள் என்ற எத்தகைய நீராதாரத்திலிருந்து நீர்பெற்றாலும் அதை மேலும் தூயதாக்குவதும் உடல் நிலைக்கேற்ப அமைத்துக் கொள்வதும் மிக அவசியம். பருவ மாறுபாடு ஏற்படும் போது இது மிகவும் அவசியமாகிறது.

பூமியின் ஆழத்திலிருந்து பெருகும் நீர் ஊற்றுகளின் நீர் மிகத் தூய்மையானதே. அடிக்கடி இரைத்துக் கொண்டிருக்கும் கிணற்று நீரும் தூய்மையானதே. ஆனால் கிணற்றைச் சுற்றியுள்ள பகுதிகளில் அசுத்த நீர்த்தேக்கத்திற்கு இடமில்லாதிருப்பது அவசியம். தூய்மை கெட்ட நீர் பூமியில் இறங்கி வடிகட்டப் பெறுமலேயே கசிந்து கிணற்று நீருடன் கலக்குமாறு கிணற்றின் சுற்றுச்சுவர்கள் அமைந்திருப்பின் அந்த நீரும் தோஷக்கலப்புள்ளதாகிறது.

சுத்தமான ஜலத்தைப் பெறுவதில் அதிக கவனம் தேவை. சுத்தமானதா அசுத்தமானதா என்று நிர்ணயிப்பதற்கு நாம் லாபரேடரிகளின் உதவியை நாட முடியாது. சுத்தமானதைக் கூட அசுத்தமானதாயிருந்தால் என்ன செய்வது என்ற சந்தேகக் கண்ணுடன் நோக்குவதில் தவறில்லை. ஆகவே புதுநீர் வரும் பருவத்திலும் ஜலவரட்சி ஏற்பட்டுள்ள நாட்களிலும் எப்போதும் குடிநீரைக் காய்ச்சி குடிப்பதென்பதே சரியான முறை. இதில் ஏமாறக்கூடாது. காய்ச்சுவது என்பது குடிக்க இதமான அளவிற்குச் சூடேற்றுவதல்ல. நன்கு கொதிக்கும் வரை காய்ச்சி இதமான சூட்டிற்கு ஆற்றியோ அல்லது தானே ஆறும்படி செய்தோ சாப்பிடுவது நலம்.

புது ஜலத்தின் குளிர்ச்சியும் நோய் தரக்கூடியதே. பூமியின் அம்சம் அதிகமுள்ள ஜலமானதால் புதுஜலம் அதிக குருத்துவமும் சீதளமும் கூடியது. ஆகவே ஸ்நானத்திற்கோ பானத்திற்கோ ஏற்றதல்ல. உடலில் மூன்றில் இரண்டு பங்கிற்குமேல் ஏதோ ஒரு உருவில் ஜலம் நிறைந்துள்ளது. சிறுநீரகம் தினமும் 60 -80 லிட்டர்

அளவுள்ள திரவ பதார்த்தத்தை வடிகட்டி உடலினுள் திருப்பி அனுப்புகிறது. ரக்தமாக உடலில் சுற்று திரவத்தின் பெரும்பகுதி ஜலம் தானே ! இந்த திரவத்தின் மிகக் குறைந்த அம்சமே சிறுநீராக வெளியாகிறது. இந்தப் பணியில் திரவ நிறைவை சரியே ஈடு செய்ய சுத்தமான ஜலத்தைத் தேவையான அளவில் உள்ளே நிரப்புவதற்கெனவே நா்வரட்சியும் நீர்வேட்கையும் ஏற்படுகிறது. ஆரோக்கியப் பாதுகாப்பிற்காக ஜலத்தைச் சுத்தமாக்கி உட்சேர்ப்பது இன்றியமையாததாகிறது.

நீர பருகுவதிலுள்ள நியமங்கள் : திரவமாக உட்செல்லும் பொருள்களில் தொன்னூறு சதவிகிதத்திற்கு மேல் ஜலம் இடம் பெறுகின்றது. அன்னமாக உட்கொள்ளும் வயது வருமுன் உள்ள குழந்தைப் பருவத்தில் திரவமான பாலும் கஞ்சியும் உணவாவதால் தனித்து ஜலம் பருகத் தேவையிருப்பதில்லை. ஜலத்தையே பருகாத நாட்டினர் சிலர் உண்டு. ரஷ்யாவின் சில பகுதிகளிலும் மற்ற குளிர் நாட்டிலும் தனித்து ஜலம் பருகத் தேவையிருப்பதில்லை. அதற்குப் பதில் திரவமான மற்ற பானங்கள் பருகப்படுகின்றன. நம் நாட்டில் மற்ற நாடுகளை விட தனித்து ஜலம் பருகும் பழக்கம் அதிகம். அதனால் ஆற்றோரங்களில் குடியிருப்பு அமைப்பு அதிகம். பொது ஜனங்களின் உபயோகத்திற்கென கிணறுகள், குளங்கள் வெட்டுதல், ஆறுகளைப் பாதுகாத்தல் முதலியவைகளைப் பூர்த்த தர்மம் எனக் கொண்டாடுவர். அப்படி பருக உபயோகிக்கும் ஜலத்தை பக்குவப்படுத்துவதிலும், பருகும் முறையிலும் நம் முன்னோர்கள் அனுபவத்தில் கண்ட பல முறைகள் மிகவும் போற்றத் தக்கவை. அவர்கள் கண்ட நீர் பருகும் முறைகளில் சிலவற்றை இங்கு தொகுத்துத் தருகிறோம்.

நீரைக்குறுக்கி : நீரைக் குறுக்கிச் சாப்பிடு என்பாள் பாட்டி. நீரைப் பொங்க பொங்கக் காய்ச்சிச் சூட்டுடன் சாப்பிடலாம். வென்னீரை ஆறவைத்துக் குளிர்ந்ததாகவும் சாப்பிடலாம். தொண்டையிலும் மார்பிலும், கபக்கட்டு, வயிற்றில் சத்தத்துடன் வாயு ஸஞ்சாரம், ஏப்பமாகவோ கீழ் வாயுவாகவோ வாயு வெளியேறாமல் ஸ்தம்பித்து நிற்பது, உணவு ஜீர்ணமாகாமல் வயிறு கனத்திருத்தல், சிறுநீர் சரியே வெளியேறாமல் உடல் கனத்தல், இருமல் ஜ்வரம் முதலிய நிலைகளில் சூடான வென்னீர் நல்லது. வாயுவைப் பிரித்து விடும் ; கபத்தை இளக்கி

வெளியேற்றும். சிறுநீரை அதிக அளவில் பிரிக்கும். உணவு ஜீர்ணமாகும். உடல் லேசாகும். ஜ்வரதாபம் குறையும். இருமல் வேகம் அடங்கும்.

காய்ச்சிக் குளிர்ந்த வென்னீர் எப்போதும் எந்நிலையிலும் சாப்பிடத் தக்கது. உடல் இளைப்பு, ரத்தம் கெட்டு சொரி சிரங்கு முதலியவை ஏற்படுதல், வாந்தி, சிறுநீருடன் ரத்தம் வெளியாதல், விஷமயக்கம், நாட்பட்ட ஜ்வரம் முதலியவைகளிலும், பித்த நோய்களிலும் ஸந்நிபாத நோய்களிலும் ஏற்றது.

ஜலத்தை அரைக்கால் அல்லது கால் பங்கு ஜலம் சுண்டுமளவு குறுக்கிக் காய்ச்சிச் சாப்பிடுவது வாயு நோய்களில் நல்லது. கோடை ஆரம்பத்திலும் பனிகால இறுதியிலும் கால்பங்கும் ஆவணி, புரட்டாசி மாதங்களில் அரைக்கால் பங்கும் சுண்டக் காய்ச்சிச் சாப்பிடுவது நல்லது.

ஜலத்தை அரைப் பங்கு மீதமாகுமளவில் சுண்டவைத்துக் காய்ச்சிச் சாப்பிடுவது பித்த நோய்களில் நல்லது. நல்ல கோடையிலும் காற்றடி காலத்திலும் இப்படிப் பாதியளவு குறுக்கிய நீர் சாப்பிட நல்லது.

கால் பங்கு மீதமாகுமளவில் குறுக்கிய நீர் முக்கியமாகக் கபநோய்களிலும், எல்லா நோய்களிலும் நல்லது.

ஜலத்தைக் காய்ச்சும் போது நுரையோ அழுக்கோ மிதந்தால் அதனை உபயோகிக்கக்கூடாது.

பகலில் காய்ச்சிய நீரை இரவில் உபயோகிக்கக்கூடாது. இரவில் காய்ச்சிய நீரை மறுநாள் பகலில் உபயோகிக்கக் கூடாது. நேரம் ஆக ஆக அதில் காய்ச்சியதால் ஏற்பட்ட லேசுத்தன்மை மாறி, எளிதில் ஜீர்ணமாகாமல் சிரமப்படுத்தும். ஆகையால் அவ்வப்போது காய்ச்சிச் சாப்பிடலாம்

நல்ல கோடையில் குளிர்ந்த ஜலம் இதமாயிருக்கும். காற்றடி காலத்திலும் மழை காலத்திலும் காய்ச்சிய நீர் பருக நல்லது. காய்ச்சிய நீரை ஆற வைத்தும் சாப்பிடலாம். ஆறிய வென்னீரை மறுபடி காய்ச்சக் கூடாது. சுக்கு வெள்ளம் என்று கேரளத்தில் வென்னீரை தனித்த முறையில் தயாரிப்பர். மலையாளிகள். எங்கு வசித்தாலும் அவர்கள் வீட்டில் இந்த சுக்கு வெள்ளம் கிடைக்கும. சுக்கு, தேங்காய் கொட்டாங்கச்சி, வருத்த கொள்ளு, கருங்காலிக்கட்டை, ஜீரகம் கொத்துமல்லி விதை

முதலியவைகளை ருசி பேதத்திற்கேற்பச் சேர்த்து ஜலத்தில் போட்டுக் காய்ச்சிக் குடிக்கின்றனர். ஜலத்தில் இந்த காற்றடி காலத்தில் காணும் தடிப்பும் எளிதில் ஜீர்ணமாகாத தன்மையும் விஷத்தன்மையும் நீங்க இது மிகவும் பயன்படுகிறது.

கொதிக்கும் வெந்நீரைச் சாப்பிடத் தக்க சூடுள்ளதாக ஆற்றிக் கொள்ள டம்ளர் — டமராவில் போட்டு ஆற்றுவது நல்லதல்ல. குளிர்ந்த காற்று, தாரையாக விழும் கொதி நீரிலே பட்டு காய்ச்சியதால் ஏற்பட்ட நல்ல குணத்தைக் கெடுத்து விடும். கொதி நீர் ஆறுவதற்கு ஆவி உள்ளடங்கும்படி மூடித்தானே ஆறுவதற்கு அவகாசமளிக்க வேண்டும். அப்படி ஆறியதுதான் நல்லது. தாரையாக விழும்படி ஆற்றிச் சாப்பிட்டால் வயிற்றில் வாயு ஸ்தம்பிக்க இடமளிக்கும.

மூர்ச்சை, உடல் எரிவு, பித்தம் புளித்துள்ள நிலை, ரத்த பித்தம், மது அதிகமாக அருந்தியதால் ஏற்படும் மயக்கம், தலை சுற்றுதல், களைப்பு, வரட்டு சுவாஸம், வாந்தி, ஹிருதயப் படபடப்பு இவைகளில் குளிர்ந்த நீர் நல்லது. விலாப்பிடிப்பு விலாவலி, சளி, வாதரோகம் தொண்டைக்கட்டு, வயிற்று உப்புசம், குடல் திமிர்த்திருத்தல், விக்கல், நெய் எண்ணெய் முதலியவை ஜீர்ணமாகாமல் ஏற்படும் காணாக்கடி போன்று தடிப்பு, அஜீர்ணத்துடன் கூடிய ஜ்வரம் இவைகளில் குளிர்ந்த ஜலம் பருகத் தக்கதல்ல. வெந்நீர் நல்லது.

அக்னி மந்தித்தல், பசியின்மை, ஜலோதரம், குஷ்டம், அஜீர்ண ஜ்வரம், கண்ணோய், ஆருதபுண், நீரிழிவு நோய் உள்ளவர்கள் எத்தனை நாவரட்சி இருப்பினும் சிறுகச் சிறுகத்தான் நீர் பருக வேண்டும். ஓரேடியாக நாவரட்சி தணியுமளவிற்கு நிறைய நீர் பருகினால் நோய் வளரும்.

நல்ல பசி இருக்கும் போது நீர் பருகக்கூடாது. வயிற்றுவலி, குன்மம் ஏற்படும். நல்ல நாவரட்சி இருக்கும் போது கெட்டியான உணவைச் சாப்பிடக்கூடாது. பவுத்திரம், மூலம், மல அடைப்பு ஏற்படும். சாப்பிட உட்கார்ந்ததும் நீர் பருகக்கூடாது. பசி மந்தித்து உணவேற்கும் விருப்பம் இன்றி உணவு செல்லாமல் போய் விடும். இப்படியே சாப்பிட உட்கார்ந்ததும் நீர் பருகப் பழகிவிட்டால் உடல் இளைத்து விடும். சாப்பாட்டின் நடுவே நீர் பருக உணவு நன்கு ஜீர்ணமாகும். சாப்பாடு முடியும் தறுவாயில் சாப்பிட தாமதமாக ஜீர்ணமாகும். உடல் பருக்கும்.

தொண்டையிலும் மேல் வயிற்றிலும் கபம் சேர இடமளிக்கும். சாப்பிட்ட பின் நிறைய நீர் பருகக்கூடாது. உடல் கனக்கும். ஜீர்ணம் தடைபடும். தாகம் இருப்பின் சிறுகச் சிறுக நீர் பருக வேண்டும்.

இரவில் படுக்குமுன் வென்னீர் சாப்பிட்டுப் படுத்துக் கொள்ளலாம். அன்று உண்ட உணவு ஜீர்ணமாகமறுநாள் காலையில் விழித்தெழுந்திருக்கையில் உடல் லேசாகி சுறுசுறுப்புடன் இருக்கும். மலபந்தமேற்படாது. விடியற்காலையில் வெறும் வயிற்றில் குளிர்ந்த நீரைப் பருகலாம். நோய்கள் அண்டாது. பித்தமடங்கி கண் பார்வை தெளிந்து நிற்கும். நல்ல ரஸாயனமாக இருக்கும்.

கோடையில் கிணற்று நீரும் ஆற்றின் நடுவில் மணல் பறித்து ஊற்றுப் போட்டு எடுத்த நீரும் நல்லது. நல்ல மழைகாலத்தில் நான்கு புறமும் நன்கு கட்டப்பட்டு ஊற்றுக்கள் உள்ள பெருங் கிணற்று நீர், பூமியின் அடியிலிருந்து குழாய்கள் வழியே பீறி வழியும் நீர்) கிணற்று நீர் இவை நல்லது பகலில் வெய்யில் நன்கு காய்ந்து, இரவில் நல்ல நிலாவொளி பட்டுத் தெளிந்து நிற்கும் நீர்த் தேக்கத்தின் நீர் என்றும் நல்லது. ஐப்பசி மாதத்தில் சூர்யன் ஸ்வாதி விசாக நக்ஷத்ரங்களில் ஸஞ்சரிக்கும் போது பெய்யும் மழையின் நீர் கங்கா ஜலத்திற்கும் ஆவியான ஜலத்திற்கும் ஒப்பானது. அதைப் பூமியில் படாமல் மேடான பூமியில் வைக்கப்பட சுத்தமான அகன்ற பாத்திரத்தில் நேரிடையாக மழை பெய்யும் பொழுது சேகரித்து வைத்துக் கொண்டு ஆண்டு முழுவதும் உபயோகிக்கலாம். தோஷமற்றது. எத்தனை கடுமையான தாயிருந்தாலும் உடல் தாபத்தை அடியோடு போக்கவல்லது. அம்மாதிரியே சித்திரை மாதத்தில் அச்வினீ நக்ஷத்ரத்தில் சூர்யன் ஸஞ்சரிக்கும் போது பெய்யும் மழையின் ஜலமும் நல்லது. இவ்விரண்டிற்கு **கங்கோதகம் ஹம்ஸோதகம்** என்ற சிறப்புப் பெயர் உண்டு.

**ஆரோக்கியத்தைக் கெடுப்பவை :**

மனிதன் அறிவாளியாயிருந்தும் பழக்கத்திற்கு அடிமையாக்கித் தன்னை இழந்து ஆரோக்கியத்தைக் குலைக்கும் பொருள்களைச் சாப்பிட முற்படுகிறான். புகையிலை, கஞ்சா, அபின் முதலியவை அவனை மாத்திரம் கெடுப்பவை. தாற்காலிகமாக மன உறுத்தல்களைச் சமனம் செய்வதாக ஏற்கப்படுபவை. பின் அவனையே ஆக்கிரமித்து அடிமை

ஆக்குபவை. அபின் கஞ்சா முதலிய லாகிரிப் பொருள்கள் மூளையைப் பாதிப்பவை. அவை தொடர்ந்து கிடைக்காத போது சமூக விரோதச் செயல்களைச் செய்தாவது அவற்றைப் பெற முயலத் தூண்டி அவனை சமூகத் துரோகியாக்கி விடுகின்றன.

மதுவினம் மற்றொரு வகையில் வாழ்க்கையைப் பாழாக்குகின்றது. அளவிற்குட்பட்டு ஏற்கப்படும்போது உற்சாகத்தையும் இழந்த வலிவை திரும்பப் பெறுவதையும் தந்தாலும் அளவிற்குள் நிற்க முடியாமல் அதிகமாகக் குடிக்கத் தூண்டுவதாலும் கெட்ட பழக்கமாகத் தொடர்ந்து துன்புறுத்துவதாலும், அது வாழ்க்கையை விரஸமாக்குகின்றது. உல்லாஸ வாழ்க்கைக்கு ஏற்ற பொருளாகத் தொடங்கிய மதுபானம் செல்வத்தையும் குடும்ப ஒற்றுமையையும் குலைத்து மனிதனைப் பொறுப்பற்றவனாக்கி விடுகிறது. இதன் பழக்கத்திற்கு ஆட்பட்டவர்களில் ஆயிரத்தில் ஒருவர் கூட மிதமாக அதனை ஏற்குமளவிற்கு மனவலிவு பெறுவதில்லை. இதன் காரணமாக மதுபானத்தை ஐந்து மகாபாதகங்களில் ஒன்றாக சமய - அறநெறி நூல்கள் குறிப்பிடுகின்றன.

பாதகங்கள் - பள்ளத்தில் தள்ளுபவை. திரும்பி எழுந்து மேடு ஏற முடியாதபடி பள்ளத்தில் தள்ளும் இவற்றைத் தவிர்ப்பது நேர்மைப்பாதையில் செல்பவனுக்கு இன்றியமையாததாகின்றது. நல்ல ஆரோக்கியம் தரும் திராக்ஷை, வெல்லம் அரிசி முதலானவற்றிலிருந்தே தயாரானவையாயிருந்தும், முறைகெட்டத் தயாரிப்பு முறையால் கெடுதலை விளைவிக்கின்ற இவற்றிலிருந்து ஒதுங்கி நிற்பதே நல்லது.

**உண்பதற்கேற்ற சூழ்நிலையில் கவனம் அவசியம் :**

உணவு எத்தனை சிறந்ததாயினும், உண்ணும் போது சுற்றியுள்ள சூழ்நிலையும் கூட இருப்பவரின் மன நிலையும் உணவின் தரத்தை மாற்றி விடும். உணவு வழங்குமிடம், உணவு பரிமாறுபவர். உணவின் உடைமையாளர். உண்பவர் இவர்களின் சரீர மன நிலை உணவின் தன்மையை ஓரளவு மாற்றி விடும். கோபம், தாபம், வெறி சோகம் போன்ற மன நிலை பாதிப்பும் உணவின் தன்மையை மாற்றிவிடும். இவற்றைக் கவனித்துச் சுமூகமான சூழ்நிலையில் எளிய நல்ல உணவைச் சீருடன் ஏற்று ஆரோக்கியமாக வாழ முற்படுவோமாக !

## பத்தியமும் அபத்தியமும்

மருத்துவ அறிவால் பெறக்கூடிய முக்கியப் பயன்கள் இரண்டு. நோயடைந்தவர்கள் நோயிலிருந்து விடுபடுவது, தன் நிலையில் நோயற்றிருப்பவர்கள் அந்தத் தன் நிலையைக் காப்பாற்றிக் கொள்வதுஎன்று. இயற்கையாக அமைந்த உடல் - மனநிலை நலத்தை முறைப்படி ஒவ்வொரு நொடியிலும் கண்ணும் கருத்துமாய் காப்பாற்றிவர ஸ்வஸ்த நிலை நீடிக்கும். இதற்கான வழிகளைச் சரியாகப் பின்பற்றுவது பத்தியம். (पथे हितं पथोऽनपेतं पथ्यं) ஸ்வஸ்த நிலையில் நீடிக்கவைக்கும் வழிகளே நல்வழிகள். அந்த நல்வழியாக அமைபவை. நல்வழிக்கு ஏற்றவை, நல்வழி விட்டு அகலாதவைகளைப் பத்தியம் என்போம். அதற்கு மாறுபட்டவைகளை அபத்தியம் என்போம்.

இந்தப் பத்தியம் நோயிலிருந்து விடுபடுவதற்கும் உதவுகிறது. வழிதவறி உணவு, உடை, நடை, பாவனை முதலியவைகளை அமைத்துக் கொண்டவன் நோய்வாய்ப் படுகிறான். மறுபடி இவைகளை நல்வழிப் படுத்துபவன் நோயிலிருந்து விடுபடுகிறான். அப்படி நல்வழிக்கேற்ற உணவு, உடை, நடை பாவனைகள் பத்தியம். நோய்க்குக் காரணமாக அமையும் அவை அபத்தியம.

வியாதி என்ற சொல் அர்த்த புஷ்டியுள்ளது விசேஷேண ஆதீயதே என இந்த சொல்லை விரித்துக் கூறலாம். செயற்கையாக நம்மேல் அழுத்தமாகப் படிவதால் நோய்களுக்கு வியாதி எனப்பெயர். உடலின் இயற்கை நிலை ஆரோக்கியம். நோய் செயற்கையாக நம்மேல் பலாத்காரமாகத் திணிக்கப்படுகிறது. நாம் அதனை விரும்பவில்லை. அப்படிப் பலாத்காரமாக நம்மேல் திணிக்கப்படுவதன் காரணம் அதனைத் தடுக்கும் வகையில் செயல்படாதிருப்பதுதான்.

நோய்க்குச் சிகித்ஸை செய்கிறோம் என்று ஒரு தவறான கருத்து உள்ளது. நோய்க்குச் சிகித்ஸை அல்ல. நோயுள்ளவனுக்குத்தான் சிகித்ஸை. நோயுள்ளவனைக் கவனிக்காமல் நோய்க்குச் சிகித்ஸை அளித்தால் நோய் நீங்கியும் நோயாளி பயனடையாமல் ஆகக் கூடும்.

இந்த நோய்வரக் காரணம் இயற்கையான ஸம நிலையிலிருந்து மனிதன் நடைமுறை அமைப்பு மாறுபடுவதே.

ஸமநிலை என்பதால் முகத்தல் - நிறுத்தல் போன்ற அளவை முறைகளால், இவை இந்த அளவில் இருக்க வேண்டுமென்று குறிப்பிட முடியாது. இவைகளின் அளவும் ஒரு வரையறையில் அடங்காது. பகல் இரவு கோடை கார் பனி என்ற வகையில் அமையும் கால மாறுபாடுகளாலும் சீதம் வரட்சி உஷ்ணம் என்ற தேச மாறுபாட்டாலும் வயது மாறுபாட்டாலும் எப்போதும் அளவிலும் தன்மையிலும் மாறிக் கொண்டே இருப்பவை அவை. ஆனால் ஸுகம் தரும் எல்லைக்குள் அந்த மாறுபாடு அமைந்திருக்குமாதலால் ஸமநிலை எனக் கொள்ளப்படுகிறது. அதனால் ஸுகம் தரும் அளவில் அமைந்தால் ஆரோக்கியம். துக்கம் தரும் அளவில் அவை அமைந்தால் நோய் என்ற பாகுபாடே எளிதில் கொள்ளத் தகும்.

ஸுகம் தரும் வரையறைக்குள் அடங்கின ஸம நிலையிலிருந்து மாறி ஸ்தூல உடல் அம்சங்கள் குறைந்தாலோ கூடினாலோ நோய். அப்படிக் குறைவதற்கும் கூடுவதற்கும் பொதுவான முறையுண்டு. உடலில் ஒவ்வொரு நொடியிலும் பரிணாமம் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. பரிணாமம் என்பது அழிவும் வளர்ச்சியும் கொண்டது. உடலிற்கு வெளியிலிருந்து உள்ளே சேரும் பொருள் முன் சொன்ன கூட்டுப் பொருள்களுடன் ஒத்திருந்தால் வளர்ச்சி, மாறுபட்டிருந்தால் தேய்வு என்பது இயற்கை முறை.

சரீரத்தில் உள்ள ரத்த தாதுவிற்கு எல்லா வகையிலும் ஒத்திருக்கும் உணவை ஏற்க ரத்தம் கூடுகிறது. ரத்தத் தன்மைக்கு எதிரான தன்மை கொண்ட உணவு ரத்ததைக் குறைக்கிறது. உணவுபோல் நடை பாவனை முதலியவையும் பயன் தருவதுண்டு.

நோயற்றிருப்பவன் நோயை எதிர்க்கும் சக்தியைப் பெற்று நோய் ஏற்படாமல் தன்னை பாதுகாக்கும் முறை பத்திய முறை. நோயுள்ளவன் நோய் ஏற்படக் காரணமாயிருந்த சூழ்நிலையை அகற்றி வழிதவறிச் செல்லும் சரீர இயக்கங்களை மறுபடி வழிப்படுத்தி மீண்டும் வழி தவறுமல் தன் நிலையில் நிலைக்கச் செய்வது பத்திய முறை. இந்தப் பத்திய முறை நோய் வராமல் பாதுகாக்க உதவும் என்ற நம்பிக்கை இருப்பதால், கடைபிடிப்பதில் சில சமயங்களில் சற்று மனக்கசப்பு தந்தாலும் முடிவில் நல்ல பலனைத் தருவதால் மனதிற்கு உவந்ததாகவும் இதமாகவும் ஆகிறது.

இதில் கவனிக்க வேண்டியது - ஒரு நேரத்தில் பத்தியமாயுள்ளது வேறு சில சமயங்களில் அபத்தியமாகக் கூடும். ஒருவனுக்குப் பத்தியமாயிருப்பது மற்றொருவனுக்கு அபத்தியமாகி விடும். அதனால் இந்த பத்தியத் தன்மையோ, அபத்தியத்தன்மையோ எந்தப் பொருளிலும் நிலைத்ததல்ல. அளவு, காலம், செயல்முறை, தேசம், உடல்வாகு முதலியவற்றால் மாறுபடக் கூடியது. இதனை உணர்ந்து பத்தியத்தை அமைத்துக் கொள்ள வேண்டும்.

உணவு முதலியவை செல்லும் பாதைகளான உணவுக்குழாய், ரஸாயனிகள் ரத்தக் குழாய்கள் முதலியவை சரியே இயங்க உதவுபவையும் அவைகளுக்கு ஊறு விளைவிக்காதவையும் பத்தியம். அதற்கு மாறுபட்டது அபத்தியம். இப்படி நோக்கும் போது உடல் இழந்த சமநிலையை மீட்டுத் தருவதும் சமநிலையில் நிலைக்கச் செய்வதும் மறுபடி சமநிலை இழக்காதபடி திடப்படுத்துவதும் பத்தியம்.

மக்களிடையே தவறான ஒரு கருத்து பரவியுள்ளது. ஆயுர்வேத மருந்துக்குப் பத்தியமுண்டு. பத்தியம் மீறினால் மருந்தாலேயே கெடுதி வரும். பத்தியமில்லாதபடி ஆயுர்வேத மருந்தை ஏற்றால் குணம் கிட்டாது என்பதே அந்தக் கருத்து. மருந்திற்கும் பத்தியம் கிடையாது. நோய்க்கும் பத்தியம் கிடையாது. நோயுற்றிருப்பவனுக்குத்தான் பத்தியம். நோய் நீங்குவதற்கு உடல் நிலை சீராகத்தக்க சூழ்நிலையை அமைத்துக் கொள்வது இன்றியமையாததாகின்றது. அந்தச் சூழ்நிலையை மருந்து அமைத்துத் தருவது போல் பத்தியமும் அமைத்துத் தருகிறது. மருந்து தன் சக்தியைச் சரியாகக் காட்டவும் இந்தப் பத்தியம் உதவுகிறது. பத்தியத்தால் தக்க சூழ்நிலை ஏற்படுத்திக் கொள்ளாமலிருந்தால் மருந்து அதிக அளவில் அதிக நாட்கள் உட்கொள்ளும் நிலை ஏற்படுகிறது. அப்படி உட் கொண்டும் பத்தியத்தால் வழி நேராகச் செய்து கொள்ளாததால் பலனே இல்லாமல் போவதும் உண்டு. பத்தியம் மருந்தை ஏற்கும் நிலையை உடலிற்குத் தருகிறது. மருந்து குணம் தராமல் தடைசெய்யும் சூழ்நிலையை அகற்றி விடுகிறது.

நமது முன்னோர்களில் பெரும்பாலும் நோய்களில் பத்தியத்தைக் கடைப்பிடிப்பர். மருந்தை மிகக் குறைவாக ஏற்பர். தினம் ஓரிரு வேளை. நோய் நீக்கத்தை எளிதில் அவர்கள் அடைந்தனர். இயற்கையே தானே தன்னை சீரமைத்துக் கொள்ள

அதிகம் உதவினர். அதனால் மருந்தால் ஏற்படும் பின் விளைவுகள் என்ற ப்ரச்னையே அவர்களிடம் எழுந்ததில்லை.

पथ्ये सति गदार्तस्य किमौषधनिषेवणैः ।
पथ्येऽसति गदार्तस्य किमौषधनिषेवणैः ॥

"நோயுற்றவன் பத்தியமிருந்தால் மருந்தால் ஆவதென்ன ? அவன் பத்தியமில்லாதிருந்தால் மருந்தால் ஆவதென்ன ? " என்பதே அதன் பொருள். பத்தியமிருந்தால் மருந்தின்றி இயற்கையே தன்னைச் சீரமைத்துக் கொள்ளும். மருந்து அந்நிலையில் தேவைப்படாது. பத்தியமில்லாதிருந்தால் உடல் நோயிலிருந்து விடுபடும் சூழ்நிலை ஏற்படாது. அப்போது மருந்து எத்தனை சாப்பிட்டாலும் பலனிருக்காது. அப்போதும் பயன்படாத மருந்து தேவையற்றதல்லவா ? அதனால் பத்தியத்தைக் கண்டு பயப்படுபவர் பெரும்பாலும் கட்டுப்பாடுகளை விரும்பாதவர்களே.

ஆரோக்கிய முறைகளில் கட்டுப்பாடற்று வாழ்வதால் நோய்கள் எளிதில் தீரக் கூடியதும் நிலைத்து விடுகின்றன. நிலைக்கத்தக்க சூழ்நிலையிருந்தாலும் கட்டுப்பாட்டால் நோய்கள் எளிதில் நீங்கிவிடுகின்றன. இதனை வற்புறுத்தவே இந்த முயற்சி

**வாயு, பித்தம், கபம் – இயற்கை நிலை :**

உடலின் இயக்கத்தைப் பொதுவாக மூன்று நிலைகளாகப் பிரிக்கலாம்.

1. **போஷண நிலை :** (போஷணம் - சேமிப்பு) பரிணாமமடையும் உடலின் வளர்ச்சிக்கும் தேய்வை ஈடுசெய்வதற்கும் புதிதாகச் சாரத்தை உடலில் சேர்க்க வேண்டும். அதற்கு மூன்று முக்கியச் செயல்கள். (1) உடலில் சேர வேண்டியவைகளை உடலின் நிலைக்கு மாற்றி ஏற்பது. (2) ஏற்றவைகளை உடலிலுள்ள பல பொருள்களின் வடிவில் மாற்றித் தருவது (3) அப்படி மாற்றிய பொருள்களை அதனதனிடத்திற்கொண்டு சேர்ப்பது. இந்த மூன்றைக் கபம், பித்தம் வாயு என்ற மூன்று தத்துவங்கள் முறையே நிறைவேற்றுகின்றன. இது போஷணத்திற்கான செயல் திட்டம்.

2. **விஸர்க்க நிலை :** (விஸர்க்கம் -வெளியேற்றம்) உடலில் சேர்ந்த பொருள்கள் அப்படியே உடலில் சாரமாகவே எப்போதும் இருப்பதில்லை. உடலியக்கத்திற்கு பயன்பட்டுப் பின்னர்

பயனற்றுப் போனவை மலமெனப்படும். இவற்றை அகற்ற வேண்டும். அதற்கு (1) அவைகளை ஓரிடத்தில் சேமிக்க வேண்டும். (2) அவைகளை வெளியேற்றும் உறுப்புகளுக்கேற்றவாறு பிரித்துத் தர வேண்டும். (3) அப்படிப் பிரித்தவைகளை அவை அவையை வெளியேற்றத் தக்க உறுப்புகளுக்குக் கொண்டு சேர்த்து அவை மூலம் வெளியேற்ற வேண்டும். இந்த மூன்றும் முறையே கபம் பித்த வாயு இவைகளின் செயல். இது விஸர்க்கத்திற்கான செயல் திட்டம்.

3. தாரண நிலை: (தாரணம் - வாழ்வு) உயிரினம் வாழவும் பெருகவும் அவைகளின் உடலில் குளிர்ச்சியும் வெப்பமும் ஒரே சீராக அமைய வேண்டும். இதன் ஏற்றத்தாழ்வு நோய்க்கும் அழிவிற்கும் காரணமாகும். அதற்காக (1) சூட்டைக் கட்டுப்படுத்தும் குளிர்ச்சியைத் தருவது. (2) குளிர்ச்சியைக் கட்டுப்படுத்தும் சூட்டைத் தருவது. (3) இந்த சூட்டையும் குளிர்ச்சியையும் அதன்தன் நிலையில் பாதுகாத்து ஏற்றத்தாழ்வைச் சீரமைப்பது. இவை முறையே கபம் பித்தம் வாயு என்ற மூன்று தத்துவங்களின் தாரணத்திற்கான செயல் திட்டம்.

இவை ஆரோக்கிய நிலையில் நடப்பவை. இவைகளை வேறு வகையில் வகைப்படுத்துவோம்.

வாயு : ஐம்பூதங்களில் ஆகாசம் வாயு என்ற இரு தத்துவங்கள் இணைந்த தத்துவம். உடலின் இயக்கம் அனைத்தையும் இது கட்டுப்படுத்துகிறது. வெளியே உள்ள காற்றாலும் வாயுவை வளர்க்கும் உணவாலும் இது ஊட்டம் பெறுகிறது (1) மூச்சை உள்ளிழுத்து வெளியிடுதல், அதன் மூலம் உடலின் பிராணசக்திச் சேமிப்பு : (2) உணவை உள்ளே ஏற்று உணவுச் சத்தை உடல் முழுவதும் பரவச் செய்து தாதுக்களை வளர்ப்பது : (3) தாது வளர்ச்சிக்குப் பயன்பட்டு மிகுந்து பயனற்றிருப்பவைகளை வெளியேற்றுவது (4) சூட்டைக் கபத்தால் கட்டுப்படுத்தியும் குளிர்ச்சியைப் பித்தத்தால் கட்டுப்படுத்தியும் உடற்சூட்டைக் காப்பாற்றி இயக்கங்களை உரிய வேகத்தில் ஊக்குவித்தல் முதலியவை இந்த தத்துவத்தின் முக்கிய செயல்.

பித்தம் - ஐம்பூதங்களில் அக்கினி தத்துவத்தாலானது. உடலில் ஏற்படும் பரிணாமங்கள் அனைத்தையும் இது கட்டுப்படுத்துகிறது. மூச்சு மூலம் கிடைக்கும் பிராண சக்தியாலும்

உணவுப் பண்டங்களில் பித்தம் வளர உதவுபவைகளாலும் ஸூர்யன் அக்னி முதலிய இயற்கை உதவியாலும் இதற்கு ஊட்டம் கிடைக்கிறது (1) உணவைப் பக்குவப் படுத்திச் சாரத்தை பிரித்துத் தருதல் (2) பிரிந்த சாரமும் ஆங்காங்கு கொண்டு செல்லப்பட்டவுடன், அந்த அந்த வளர்ச்சி அடைய வேண்டிய தாதுவுடன் இணைவதற்கேற்ப பக்குவப்படுத்தித் தருதல் (3) தாது வளர்ச்சிக்குப் பயன்பட்டபின் மிகுந்த பயனற்றவைகளைப் பிரித்து வெளியேற்ற வாயுவிற்கு உதவுதல் (4) உடற்சூட்டைப் பாதுகாத்து இயக்கங்களும் பரிணாமங்களும் இடைவிடாமல் நடக்கச் செய்தல், இவை முக்கியச் செயலாகும்.

கபம் - ஐம்பூதங்களில் ஜல தத்துவமும் பிருதிவீ தத்துவமும் இணைந்த தத்துவம் (1) உடலில் சேர வேண்டியதை உடல் அமைப்பிற்கேற்ப நீர்த்து நெகிழச் செய்துப் பக்குவப்படுத்தும் பித்தத்திற்கு உதவுதல், (2) வெளியேற்ற வேண்டியவைகளை ஒருமிக்கச் சேமித்துத் தாங்கி வெளியேறச் செய்தல் (3) உடற்சூட்டைக் கட்டுப்படுத்துதல் (4) உடலின் எடை, தோற்றம் அவயவ அமைப்பு வளர்ச்சி இவைகளுக்கான நெகிழும் பொருளாக அமைவது அழகுபடுத்துதல் இவை முக்கியச் செயலாகும்.

ஆரோக்கிய நிலையில் இவை இணைந்து சுமுகமாகச் செயல்படுவதால் இது வாயுவின் செயல். இது பித்தத்தின் செயல், இது கபத்தின் செயல் எனப் பிரித்துணர முடியாதபடி அமைந்திருக்கும். அதனால் அந்நிலையில் வாயு பித்த கபங்கள் இருப்பதாகவே தோன்றாது. நோயுற்ற நிலையில் இவைகளின் செயல்முறை ஒன்றுக்கொன்று முரண்பட்டும் ஏற்றத் தாழ்வுடனும் காணப்படுவதால் இது வாயு இது பித்தம் இது கபம் எனப் பிரித்து உணரப்படும்.

நோய்கள் வரும் முறை

வாதம் பித்தம் கபம் என்ற மூன்றின் சமநிலை கெட்டால் நோய் ஏற்படுகின்றது. அப்படி ஏற்படும் நோய் உடலின் ஏதேனும் ஒரு பகுதியைப் பற்றி வரலாம். உடல் முழுவதும் பாதிக்குமாறும் அமையலாம். ஸம நிலை மாறி நோய் நிலைக்கு வர ஒரு முறை - ஒரு வழி உண்டு. இயற்கை எப்போதும் முறையைப் பின்பற்றும். இதனை உதாரணங்களைக் கொண்டு விளக்கு வோம்.

ஜ்வரம் - அஜீர்ணத்தால் ஏற்பட்டது. கண் விழிப்பு, நெடு வழி ப்ரயாணம். அதனால் உரிய நேரத்தில் மல மூத்திர

வெளியேற்றம் தடைபட்டுள்ளது. வழியில் சூடு குறைந்ததும் வரண்டதுமான உணவு. வழக்கமில்லாத அதன் சுவை முதலியவை மனத்திற்கு திருப்தி தரவில்லை. உணவு கிட்டியபோது நல்ல பசி இல்லை. பசி இருந்தபோது உணவு கிட்டவில்லை. தக்கபடி அமர இருக்கை கிடைக்காததால் தசைகளில் இறுக்கமும் வலியும். வீட்டிற்கு வந்ததும் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம். தயிர் பருப்பு கலந்த உணவு. முன் கூறியவை அனைத்தும் உடலின் இயக்கத்தில் முக்கியப் பங்கு கொண்டுள்ள நரம்பு மண்டலத்தின் நல்லியக்கத்திற்கான காரணமான வாயுவை அதிகப்படுத்தின.

முன் அஜீர்ணமாக இரைப்பையிலும் குடலிலும் தங்கியுள்ள மப்புடன், பசி உணர்வு, ஏற்படும் முன்னரே வீட்டில் கிடைத்த உணவு இரைப்பையில் அதிக அளவு சேர்ந்து அஜீர்ணத்தால் கனத்தை ஏற்படுத்தியது. இந்த நிலையில் ஜீர்ண கோசத்திலிருந்து உடலில் தாதுவாகச் சேர்வதற்குப் பிரிந்த உணவுச்சத்தும் மப்பு மிக்கதாக இருந்தது. மப்பு நீங்குமளவிற்குப் பாகம் செய்ய முடியாதபடி இரைப்பையின் ஜீர்ண சக்தி குன்றியுள்ள நிலை. வியர்வை கோளங்கள் வழியே மலநீக்கம் செய்ய முடியாததால், தடிப்பு மிகுந்து, ரத்தத்துடன் கலந்து உணவுச்சத்து, உடல் கனத்திருப்பது போன்ற உணர்ச்சியைத் தந்தது. அவ்வப்போது தோலின் மூலம் வெளியேற வேண்டிய சூடு அதிகமாகியது.

சூடு தேவைப்படும் இடமான ஜீர்ணகோச அமைப்பில் சூடில்லை. சூடு அதிகமாக இருக்க வேண்டாத தோல் முதலிய இடத்தில் சூடு அதிகம். தடை எங்கு அதிகமோ அங்கு அதிகச் சூடு. அதனால் கால் கைகளில் சூடு குறைவு, தலையில் சூடு குறைவு. நடு உடல் பகுதியில் சூடு அதிகம். தடை மிகுதியால் உணர்ச்சித் தடை. மதமதப்பு, கடுப்பு வலி, குளிர், வாய்க் கசப்பு ஜீர்ணமின்மையால் வாயில் நீர் ஊறுதல், அல்லது மப்பு வயிற்றில் கனத்திருந்தால் அதிக நாவரட்சி, ருசியின்மை, வெகுட்டல் என்ற வரிசை. இது வாயு ஜ்வரம்.

## பத்தியமும் அபத்தியமும் செயலாற்றும் முறை

இங்கு சூடாக வென்னீர் சாப்பிட்டால் இதமாக இருக்கும். சூடு அடைப்பை நெகிழ்த்தித் தடையை அப்புறப்படுத்துகிறது. தாபம் அதிகமாக இருந்தாலும் குளிர்ந்த நீர் முதலியவை ஒத்துக்

கொள்ளவில்லை. குளிர்ச்சியால் தடை அதிகமாகிறது. வென்னீர் சிறுகச் சிறுகப் பருக வயிற்றிலுள்ள ஜீர்ண கோசத்தின் இயற்கைச் சூட்டிற்கு உதவி கிட்டுகிறது. மப்பு கனம் குறைகிறது. அதே வென்னீரை அதிக அளவில் சாப்பிட்டால் அது மப்பை அதிகப்படுத்துகிறது. திரவம் அதிகமாவதால். ஒத்தடம் முதலியவற்றால் தோல் சூட்டை அதிகப் படுத்தினால் அதே சூடு வேதனை தருகிறது. பொதுவாகச் சூடு மப்பைக் குறைக்க உதவும். ஆனால் இங்கு வியர்வை கோளங்கள் மப்பால் அடைப்பட்டிருப்பதால் இந்தச் சூடு உள் மப்பைக் குறைக்க உதவவில்லை.

ஆக இங்கு வென்னீர் சாப்பிடுவது பத்தியம். வென்னீர் ஒத்தடம் அபத்தியம். வென்னீர் ஏன் பத்தியம் ? வாயுதோஷம் கெட்டிருந்ததை அது நேர்படுத்துகின்றது. வாயுவின் இயற்கை வழிக்கு அதனைக் கொண்டு விடுகிறது. அப்படிச் செய்ய அது பின்பற்றும் முறை பின்வருமாறு - வாத ஜ்வரத்தில் தொடர்ந்து நேர்ந்த அஜீர்ண அபத்தியத்தால் வயிற்றில் சேர்ந்திருந்த மப்பு, அங்கு அதனை ஜீர்ணிக்க உதவுகிற இயற்கைச் சூட்டைக் குறைத்து விட்டது. வென்னீர் சிறுகச் சிறுகப் பருக இரைப்பையில் இதமான சூடு அளவில் அதிகமாகிறது. கனத்து இறுகியிருக்கும் மப்பு நெகிழ்ந்து தடையாக இராமல் நகர்கிறது. ஜீர்ணத் திரவங்களால் அதில் இதமான மாற்றம் - ஜீர்ணம் - பக்குவம் நடைபெறுகிறது. நாக்கின்மேல் மப்பால் படர்ந்திருந்த கபப் பிசுபிசுப்பு கரைந்து ருசி உணர்ச்சியைச் சீர் செய்கிறது.

இரைப்பையைவிட்டு கனத்த அஜீர்ணம் நெகிழ்ந்து சிறு குடலுக்குள் செல்வதால் அங்கும் முன்னிருந்த தடைகள் அகல்வதால் ஜீர்ண கோசப்பாதை அடைப்பு நீங்கி வயிறு லேசாகிறது. இந்த ஜீர்ணசக்தி நேரானதும், இதன் தொடர்பாக முன் உள் கலந்திருந்த உணவுச் சத்திலும் மப்பு அகற்றப்பட்டு உடல் முழுவதும் ஏற்பட்டிருந்த தடைகள் விலகுகின்றன. உடல் லேசாகிறது. தடையால் அதிகமாயிருந்த சூடு தணிகிறது. ஜ்வரத்தின் காரணம் அகலுவதால் ஜ்வரம் அகலுகிறது.

ஒரு நிலையில் பத்தியம் - மற்றொரு நிலையில் அபத்தியம்

இந்தக் கடுமையான தாபத்தையும் வலியையும் குறைக்க இன்று கைகண்ட மருந்தென மக்கள் ஏற்பது பாரஸிட்மால், ஆஸ்பிரின் முதலியவை. இவைகளைச் சாப்பிட்டதும் வலியும்

தாபமும் குறைகிறது. உடல் லேசானதாக ஒரு பிரமை ஏற்படுகிறது. ஆனால் முன்னர் கூறப்பட்ட சூழ்நிலையில் ஏற்பட்ட ஜ்வரத்தில் ஒரு சில மணி நேரங்களுக்குப்பின் மறுபடி ஜ்வரம் கடுமையாக ஏறிக் குளிரும், தாபமும் வலியும் முன்னை விட அதிகமாகக் காணும். இம்மாதிரி நிலைகளில் இம்மருந்துகளே அபத்தியமாகி நோய் கடுமை பெற்று காமாலை போன்ற கடும் நோய்க்கிடம் தருவது உண்டு. அது ஏன் ? வெளிச்சூடு அதிகமானதற்கான உண்மைக் காரணம் - அஜீர்ணம். அதனால் விளைந்த அடைப்பு அகற்றப்படவில்லை. மூளையின் நரம்பு மண்டலத்தில் வலியையும் சூட்டையும் கட்டுப்படுத்தும் நரம்புகளை ஊக்குவிப்பதால், வலி குறைவது தாற்காலிக லாபம். அந்த நேரத்தில் மருந்தால் விளைவது தளர்ச்சி. தளர்ச்சியால் கல்லீரல் - இரைப்பை முதலியவை மேலும் கேடுறுகின்றன. பின் விளைவு கடுமையான ஜ்வரம், உள் உறுப்புகள் பாதிப்பு. அஜீர்ணமில்லாத நிலையில் அழற்சியால் ஏற்பட்ட - வலி தாபம் அதிகமாக உள்ள ஜ்வரத்தில் ஆஸ்பிரின் முதலியவை நல்ல குணம் தரக்கூடும். அந்த நிலையில் அவை பத்தியமானவையே. நாம் குறிப்பிட்ட அஜீர்ண ஜ்வர நிலையில் அஜீர்ணம் நீங்காதவரை தனித்து அவை அபத்தியமானவையே.

நாம் தினந்தோறும் ஏற்கும் பச்சரிசிச்சாதம் அல்லது புழுங்கலரிசிச் சாதம் பத்தியமான உணவே. எனினும் அதே சாதம் முன் கூறிய அஜீர்ணத்தால் உண்டான வாதஜ்வர நிலையில் அபத்தியமாகிறது. முன் உண்ட உணவு ஜீர்ணமாகா நிலையில் விஷமித்து இரைப்பையில் இருக்கும் போது மறுபடி கெட்டியான இந்தச் சாதம் உள்ளே சேர்ந்து அஜீர்ணத்தை அதிகபடுத்தி விடுகின்றது. அதே புழுங்கலரிசியை நிறைய நீர் சேர்த்துக் காய்ச்சியோ, அதே சாதத்தை ஜலம் சேர்த்துக் காய்ச்சிய புனப்பாகக் கஞ்சியோ, சூடாக இந்நிலையில் ஏற்க நல்லது. நீர்த்துச் சூடாக இருப்பதால் முன் இறுகியுள்ள உணவை நெகிழ்த்துகிறது. அது ஜீர்ணமாவதற்கு உதவுகிறது. அதனால் இது பத்தியமாகிறது. சாதமானதே கஞ்சியானால் பத்தியம். சாதமாகவே உண்ணும் போது அபத்தியம்.

இந்த வகையில் ஒரு உணவை எப்போதும் எந்நிலையிலும் பத்தியமென்றோ அபத்தியமென்றோ குறிப்பிட முடியாது. இந்த இந்த நிலைகளில் இவை தவிர்க்கத் தக்கவை. இந்த இந்த நிலைகளில் இவை நல்லவை என்று குறிப்பு மட்டும் தர இயலும்.

பத்தியம் பற்றிய சில தவருன கருத்துகள்

*(!) ஆயுர்வேத மருந்து என்ருல் பத்தியம் உண்டு. நவீன வைத்தியம் முறையில் மருந்திற்குப் பத்தியமில்லை என்று மேல் எழுந்தவாரியான கருத்து பரவலாக உள்ளது (2) பத்தியம் என்ற சொல்லிற்கே பட்டினி என்று பொருள் கொள்பவரும் உண்டு (3) உணவு மட்டுமே பத்தியம். நடைமுறை, குடியிருப்பு முதலியவை பத்தியத்தில் சேராது என்ற எண்ணமும் உண்டு. (4) பத்தியமே போதுமானது ; மருந்து தேவை இல்லை. மருந்தே போதும் ; பத்தியம் தேவை இல்லை இவை தவருன கருத்துக்கள்.*

*பத்தியமானது நோய் நிலைக்கு மாறிவிட்ட இயற்கை நிலையைத் திரும்ப ஆரோக்கிய நிலைக்கு வழிபடுத்துவதேயாகும். இந்த மாற்றத்தை மருந்து, உணவு, நடைமுறை, இடம் சூழ்நிலை முதலியவை செய்து தரும். இவை அனைத்துமே பத்தியம்தான். மருந்திற்காகப் பத்தியம் கிடையாது. நோய்க்காகவே பத்தியம். அதனால் எவ்வகை மருத்துவ முறையை ஏற்றாலும் பத்தியம் தேவையே.*

*சில மருந்துகள் உடலில் வேலைசெய்யத் தகுந்த சூழ்நிலை இல்லாவிடில் குணம் தராது. அந்த நிலைக்குக் காரணம் உடலின் உள்ளே நேரும் அபத்தியச் சேர்க்கையே. அதனைத் தவிர்க்கப் பத்தியம் சேர்ப்பததும் அபத்தியம் தவிர்ப்பதும் அவசியம்.*

*சிறுநீர் அதிகமாகப் பிரியாமல் வீக்கம் முதலியவை நேரும் போது உப்பு தவிர்க்கப்படுகின்றது. உப்பு நீர் கோர்த்துக் கொள்ள உதவும். உடலில் நீர் கோர்வை அதிகமாக இருப்பதால் தான் வீக்கம் முதலியவை ஏற்பட்டுள்ளது. ஒருபுறம் நீர் கோர்வையைப் பிரிக்க மருந்தையும் மறுபுறம் நீர் கோர்வையை அதிகப்படுத்தும் உப்பையும் சேர்க்க உடல் செய்வதறியாமல் திணறும். இதனைத் தவிர்க்க உப்பைத் தவிர்ப்பது அவசியம். இங்கு உப்பு அபத்தியம்.*

*சில மருந்துகள் வெறும் வயிற்றில் சாப்பிடுவது நல்லது. இரைப்பையில் உணவு நிரம்பியிருக்கும் போது அதனைச் சாப்பிட மருந்து வலிவிழந்து குணம் தராது. சில மருந்துகளைச் சில நிலைகளில் வெறும் வயிற்றில் சாப்பிட வயிறு புண்ணாகிவிடும். ஆஸ்பிரினை வயிற்றில் அழற்சி புண் உள்ளவர்கள் சாப்பிட நேரிட்டால், உணவேற்றபின் சாப்பிடுவது அதிகக் கேடு தராது. வெறும் வயிற்றில் சாப்பிட இரைப்பை வெந்து புண்ணாகி, ரத்தக்கசிவு ஏற்படக் கூடும். அதனால் ஆஸ்பிரின் சிலருக்குச் சில நிலைகளில் வெறும் வயிற்றில் அபத்தியம்.*

பத்தியம் என்பது சாப்பாட்டின் அளவையும் கனத்தையும் குறைப்பது மட்டுமல்ல. இதமான உணவு பத்தியம். சிலசமயம் அளவில் - சத்தில் குறைந்த உணவைத் தொடர்ந்துஏற்ற பழக்கம் காரணமாக சில நோய்கள் ஏற்படக் கூடும். அங்கு முறைப்படி அமைந்த தக்க புஷ்டி தருகிற கனத்த உணவே பத்தியமாகும்.

உணவு மட்டுமே பத்தியமல்ல. ஆஸ்துமாவில் தூய காற்றுள்ள வெட்ட வெளியிலிருப்பது பத்தியம். முன் கூறிய வாத ஜ்வரத்தில் காற்றோட்டம் அதிகமில்லாத அறையினுள் வசிப்பது பத்தியம்.

நோயுற்றவன் பத்தியத்தைக் கையாண்டால் மருந்து தேவையில்லை. பத்தியத்தைக் கைவிட்ட பின் மருந்தால் ஆவதொன்றுமில்லை'' என்று ஒரு பழமொழி. பத்தியத்தின் முக்கியத்தை வற்புறுத்துகிறது என அதனைக் கொள்வது உசிதமே. பத்தியமே போதும். மருந்தே வேண்டாம் என்பது சரியில்லை. பத்தியம் இருப்புப் பாதை. மருந்து வண்டிகளை இழுத்துச் செல்லும் இஞ்சின். இஞ்சினுக்கும் இஞ்சின் செல்லும் தரைக்கும் பழுதின்றி எளிதில் அடைய வேண்டிய இடத்தை அடைய இருப்புப்பாதை உதவுகிறது. இஞ்சினில்லாமல், இருப்புப்பாதை உதவியால் வண்டிகளை தள்ள முடியலாம். ஆனால் களைப்பைத் தரும். மிகமிகத் தாமதமாகும். அதே நேரத்தில் பத்தியமின்றி மருந்து மட்டுமே போதும் என்பதும் சரியல்ல. தடங்கிலின்றியும் உடலைப் பாதிக்காதபடியும் மருந்துகள் செயலாற்றப் பத்தியம் அவசியத்தேவை.

உண்மை நிலையை விளக்கப்புகின், மருந்தின் - மருத்துவத்தின் ஒரு முக்கிய அங்கம் பத்தியம். மருந்தைவிட்டு, வேறுபட்டதல்ல. மருந்தும் பத்தியமே. உடல்நிலைக் கொவ்வாத மருந்தே தீராத பல்வேறு நோய்களைக் கிளப்பிவிட்டு நோய்க்காரணமான கிருமி முதலானவற்றை விடக் கொடிய காரணமாகி விடுவது இன்று ஸஹஜமாக உள்ளது. அத்தகைய மருந்தை விடக் கொடிய அபத்தியமுண்டா?

உடல்நிலை சீர்கெட்டுள்ளது. சீர்கெடக் காரணம் ஒழுங்கீனம், அதனைச் சீர்படுத்த உதவும் முறையே பத்தியம். எதிர்பாராதபடி, ஒழுங்கீனம் காரணமாகாமல் ஏற்படும். நோய்கள் மிகமிகச் சிலதே. அந்த நிலைகளிலும் ஒழுங்கீனம் காரணமாகாவிட்டாலும் ஒழுங்கு முறையை நன்கு

அனுசரிப்பதால், சீக்கிரம் நோய் கட்டுப்படும். அதனால் எல்லா நிலைகளிலும் நோய் நிலைகளிலும் மீண்டும் சுகம்பெறவும் மீண்டும் நோய் நிலையை அடையவிடாமல் சுக நிலையை பாதுகாக்கவும் இந்த ஒழுங்குமுறை பத்தியம், இன்றியமையாதது என்பதைக் குறிப்பிடவே இந்நெடு விளக்கம்.

பத்தியம் என்றவுடன் மணக்கண்முன் வருவது ஐந்து முறைகள் : 1 உப்பில்லாத பத்தியம் 2. புளியில்லாத பத்தியம் வாயுப்பண்டம் நீக்கிய பத்தியம் 3. கரப்பான் பண்டம் நீக்கிய பத்தியம் 5. லங்கனம் (லகுவான உணவு) இவைகளைப் பற்றி முதலில் பொதுவாக அறிந்துகொள்வோம்.

உப்பில்லாத பத்தியம்

உப்பால் ஏற்படும் நன்மை : உப்பு உடலுக்குத் தேவையான உணவுப் பொருள். உணவு செரிப்பதற்கான இரைப்பையின் அக்கினி பலம் இதனால் வளர்கிறது. இதுவே உணவுச் சத்தாகச் சேர்ந்து உடலைத் தாங்குகிறது. அன்ன பானங்களிலிருநது நீரின் பெரும் பகுதியை உடலில் பிடித்து வைத்துக் கொள்ள இது உதவுகிறது. உணவில் விருப்பத்தையும் சுவையையும் கூட்டுகிறது. சுயநலமற்ற தியாகிபோல், தனித்து, அகங்காரம் வெளிப்பட நிற்காமல், கரைந்து மறைந்து ஆனால் ஊடுறுவி தன்னிலை இழக்காமல் பரவி நிற்கிறது. பேதி முதலியவற்றால் பெருமளவில் நீர்ப்பகுதி வெளியேறிவிட்டால், உடன் உப்புக்கரைசல் உள் செலுத்தப் படுகிறது. உடன் நிலை சீரடைகிறது.

உப்பை நீக்க வேண்டியதன் அவசியம் : கசியும் தன்மையுள்ள உப்பு மற்றவற்றையும் நீர்க்கச் செய்து உருத்தெரியாமல் செய்ய வல்லது. உப்புடன் சேர்த்துப் புதைக்கப்பெற்ற உடல் விரைவில் உரு மறைந்து விடுகிறதல்லவா ? இந்தக் கசிவும் கரைப்பும் ஆரோக்கிய நிலையில் ஓரளவு கட்டுப்பட்டுள்ளது. உப்பில்லாப் பண்டம் குப்பையில் என்பர். உப்பில்லாத உணவு செரிக்காமல் பெருமளவு மலப்பையில் தங்கி வெளியாகிவிடும். இந்தக் கசிவும் கரைப்பும் அளவிற்கு உட்பட்டிருக்கும் வரை நல்லதே. இந்தக் கசிவும் கரைப்பும் சுற்றியுள்ள நீரைத் தன்னிடத்திற்கு இழுத்துக் கொள்கிறது. உப்பு வாயில் பட்டவுடன் நாக்கின் தடிப்பு குறைந்து ஜலம் ஊறுகிறது. உப்பு வைத்த காகிதத்தில் கசிவு காண்கிறது. சூழ்நிலையிலுள்ள ஆவியாக நிற்கும்

நீரைக்கூடத் தன்பால் இழுத்துக் கொள்கிறது. உப்பு கலந்த நீரில் இருந்த மணல் சேர்த்துக் கட்டிய சுண்ணாம்புக் கட்டடத்தில் காரை உதிரும்.

தசைகள், வியர்வைக் கோளங்கள், சிறுநீரகம், இவை பாதிக்கப் பெற்றிருந்தால் அங்கு உப்பு கேடு விளைவிக்கிறது. தசைகள் வியர்வை கோளங்கள் இவற்றில் உடலில் சேமிக்கப்பட்டுள்ள பெரும்பகுதி நீர் தங்கி நிற்கிறது. இந்த நீர் அவைகளில் கட்டுப்பட்டு நிற்பதால்தான் உடல் கட்டுக் குலையாமல் நிற்கிறது. திரவாம்சம் அவ்விடங்களில் இருந்து பிரிந்து வெளியேறித் திசுக்களின் இடையே சேர ஆரம்பித்தால் உடல் முழுவதும் வீக்கம் மகோதரம் போன்ற நோய் நிலைகள் ஏற்படக் கூடுமட ரத்தம் முறிந்து நீராகிறது என்பர்.

மஹோதரத்தில் வயிற்றிலுள்ள வெளித் தசைகளுக்குள்ளும் குடலைப் போர்த்தி நிற்கும் சவ்வுகளுக்குமிடையே நீர்க்கசிவு அதிகமாகித் தேங்குகிறது. ஸாதாரணமாக ஆரோக்கிய நிலையில் குடலிலிருந்து நீர் உறிஞ்சப்பெற்று. ரத்தத்தில் சேர்ந்து அதன் தேவை பூர்த்தியானதும். மற்ற மலப்பகுதிகளையும் தாங்கிச் சிறுநீராகப் பிரிக்கப்பெற்று வெளியேறுகின்றது. அப்படி உட்செல்லாத நீர்ப்பகுதி மலத்துடன் பெருங்குடல் வழியே வெளியாகிறது. மஹோதரத்தில் வயிற்றில் தேங்கிய நீர் இவ்விரு வழிகளால் வெளியேறுமலும் குடலுக்கு வெளியே சவ்வுகளிடையே தேங்கி நிற்கிறது. இதனை நீர்ப்பேதியாகும் மருந்துகளால் ஓரளவு குறைக்கலாம். சிறுநீர் போவதை அதிகமாக்கி உடலில் நீர் அம்சத்தையே வற்ற வைத்து இதன் வேகத்தைக் குறைக்கலாம். இப்படிச் செய்தும் நிலைமை சீராகாமலிருக்கக் கூடும். இதற்கு உதவ உப்பை நிறுத்தி, உப்பில்லாத உணவைக் கொடுப்பதே உப்பில்லாத பத்தியம். உப்பில்லையேல் உடலில் திரவாம்சம் சேர்வது குறையும். கசிவும் குறையும்.

உடலிலிருந்த உப்பு வெளியேற இரு வழிகள். ஒன்று வியர்வை கோளங்கள் மூலம். மற்றொன்று சிறுநீரகத்தின் மூலம். மகோதரத்திலும், உடல் முழுவதிலும் வரும் வீக்கத்திலும் அதிக அளவில் சிறுநீரை வெளியேற்றுவதே முக்கிய உபாயம். நீரைச் சிறுநீராக்கும் நுட்பமான இயந்திரம் - சிறுநீரகம் இது இந்நிலைகளில் அழற்சி அடையும். உப்பு அதன் அழற்சியை அதிகப்படுத்தும். அழற்சியுள்ள சிறுநீரகங்கள் சீராக

இயங்காததால் சிறுநீர் வெளியேற்றம் தடைபடும். அழற்சி காரணமாக புண்ணாவது போன்ற பல விஷ நிலைகள் தொடரக் கூடும். இந் விஷ சக்கிரச் சூழ்நிலையைத் தவிர்க்கவே உப்பை உடன் நிறுத்துகிறோம்.

உப்பு குறைந்தால் கசிவும் கரைதலும் குறைந்து விடுகின்றன. புண்கள் ஆறுகின்றன. அழற்சி வெந்தது போன்ற நிலை தணிகிறது. உடலில் கசிவு குறைவதால் அதிக அளவில் சிறுநீராக்கும் பணியின் தேவை குறைகிறது. சிறுநீரகத்திற்கு ஓய்வு கிட்டுகிறது. வலிவுபெற்றுப் பின் அதிக அளவில் சிறுநீரை வெளியேற்ற அதனால் முடியும். உப்பை நிறுத்துவதால் மட்டுமே இந்நோய் நிலைகளில் எதிர்பார்த்ததை விட வேகமாக நோய் நீங்கியதைக் காண முடியும்.

சிறுநீரகம் அழற்சியும் தளர்ச்சியும் வேறுவிதமான பாதிப்புமுற்றிருந்தால் உடன் அதன் வேலைப்பளுவைக் குறைக்க உப்பை நிறுத்த வேண்டி வருகிறது.

உடலில் அரிப்பு நீர்க்கசிவு தடிப்பு முதலியவைகளுடன் திடீரென உடல் முழுவதிலுமோ, ஓரிடத்திலோ தோன்றும் அழுகுண்ணிப் படை, கரப்பான், அக்கி முதலிய நோய்களில் தோலின் அரிப்பை அதிகமாக்கும் கரப்பான் பண்டங்களுடன் (இது பற்றிய விவரம் தொடர்ந்து வருகிறது) உப்பையும் தவிர்க்க வேண்டும்.உப்பை நிறுத்தியதும் கசிவும் தடிப்பும் குறைந்து அரிப்பு மறைகின்றது.

உப்பு குறைந்த நிலைகளில் மட்டுமே சேர்க்கத் தக்க சில மருந்துகள் உண்டு. வீரம் பூரம் போன்ற கொடிய விஷ சக்தி கொண்ட மருந்துகள் மிகக் குறைந்த அளவில் கூடக் கசிவுள்ள இடங்களில் அழற்சியையும் வீக்கத்தையும் ஏற்படுத்துபவை. தக்கப்பாதுகாப்புடன் சுத்தி செய்து அழற்சியைக் கட்டுப்படுத்தும் கூட்டுப் பொருள்களுடன் சேர்த்துக் கொடுத்தாலும் அவை தன் சுயரூபத்தைக் காட்ட வல்லவை. அவைகள், அறியாமல் விஷமாகச் சேர்ந்திருந்தாலும், அறிந்து மருந்தாக சேர்க்கப்பட இருந்தாலும், உப்பைக் குறைத்து உண்ண அவற்றால் பாதிப்பிராது. மருந்தாகச் சேர்க்கப்பட்டிருப்பின் அவை எதிர்பார்த்த குணம் தரும்.

ஊளைச்சதை கவிச்சை நாற்றத்துடன் அதிக வியர்வை முதலியவற்றால் வேதனையுறுபவர்கூட உப்பை நீக்கி சுகம் பெறலாம்.

## ஆரோக்கிய நிலையிலும் உப்பில்லா உணவு உதவுகிறது

மனம் தெளியவும், குழப்பமற்று ஆழ்ந்த சிந்தனை, தியானம் முதலியவற்றில் ஈடுபடவும், மனம் சஞ்சலமற்றிருக்கவும் உப்பில்லாத உணவு உதவுகிறது. மனத்தெளிவு முதலியவற்றை எதிர்பார்ப்பவர் 2 - 3 வேளைகள் தொடர்ந்து உப்பையும் உப்பின்றி சுவை தராத உணவையும் நீக்கித் திருப்தியுடன் சாப்பிட்டாலும் எதிர் பாராத பல நன்மைகளைப் பெறலாம். ரஜோகுணம் குறையும். ஸத்வ குணம் வளரும். வியர்வையும் அசதியும் ஏற்படாது. உடுத்திய துணியில் நாற்றமிருக்காது. சிறுநீரிலும் மலத்திலும் கூட வாடை குறையும். தொடர்ந்து மனக்களைப்பின்றி செயல் பட முடியும். ஒரே நிலையில் இருக்க இது பெரிதும் உதவும். ஆண்டவனைக் குறித்துச் செய்யப்படும் விரதங்களிலும் வழிபாடுகளிலும் தொடர்ந்த நூல் பாராயணங்களிலும் உப்பில்லாதிருப்பதைப் பெரிதும் வற்புறுத்துவர்

## உப்பில்லாத பத்தியம் - எதனைச் சாப்பிடுவது ?

உப்பை மட்டும் நீக்கிப் புளி எண்ணெய் மிளகாய் பருப்பு காய்கறிகள் சேர்த்துச் சாப்பிடலாமா ? உப்பில்லாத இட்டிலி தோசை வறுவல் பொறியல் சாப்பிடலாமா ? கூடாது. சில இளங்காய்களில் இயற்கையாகவே உப்புண்டு. அவற்றை உப்பில்லாமல் வேகவைத்துச் சேர்த்துக் கொள்ளலாம். பால், புளிக்காத மோர், இவை சேர்த்த அன்னம், கஞ்சி வறுத்த பாசிப்பருப்பு சேர்த்த பொங்கல் சாப்பிடலாம்.

புளி, மிளகாய், எண்ணெய், முற்றிய காய்கறிகள், கிழங்குகள் முதலியவை உப்பின்றி சுவை தராதவை. எளிதிலும் செரிக்காதவை. இவைகளை உப்பின்றிச் சமைத்து உண்பதால் கெடுதல், வெகுட்டல், செரியாமை எதுக்களிப்பு, வயிற்றில் மந்தம், பேதி வாந்தி முதலியவை ஏற்படலாம்.

**சுவைகளில் ஒன்றுக்கொன்று துணை நிற்கும் :** காரம் உள்ள மிளகாயை உப்பின்றிச் சாப்பிட வயிற்றில் வேக்காளம் ஏற்படும். காரம் நீர் வரட்சியைத் தரும். உப்புக் கசிவைத் தரும். ஜீர்ணப்பாதையில் கசிவைத் தரும் உப்பு காரத்தின் எரிவைக் குறைக்கிறது. காரத்திற்கு உப்பு பாதுகாப்பு. உப்பின்றி காரம் பெரும் எதிரி.

புளிப்பை உப்பின் துணையின்றி சாப்பிட எரிவு, வெகுட்டல், வயிற்றுப் புரட்டல், இவைகளைத் தரும். உமிழ்நீர்க் கசிவை அதிகப்படுத்தும். உணவு வேட்கையை மிகைப்படுத்தும். உண்ட உணவு த்ருப்தி தராது.

தனித்து அதிகத் தித்திப்புள்ள உணவு வெகுட்டல் தரும். தேர்ந்த சமையல்காரராயின் அதில் சிறிது உப்பைத் தூவுவர். அதனால் இனிப்பே மேலும் இனிக்கும். வெகுட்டல் இராது. உப்பு அதிகமாகி விட்டால், அதன் கைப்பைக் குறைக்கத் தித்திப்பு சேர்ப்பர். அதே போல் கசப்பு மிக்க பொருள் வெகுட்டலைத் தரும். உப்பு சேர்க்க வெகுட்டலைத் தராது. தித்திப்புடன் புளிப்பு சேர அது மனத்திலும் இனிக்கும். பானங்களைத் தித்திப்பும் புளிப்புமுள்ள பொருள்களைக் கொண்டு தயாரிக்கும் போது அதில் சிறிது உப்பு சேர்ப்பது ருசி கூட்டும். தித்திப்போ மற்ற சுவைகளோ கொண்ட பொருள்களைத் தனித்து அதிக அளவில் சாப்பிட முடியாது. உப்பு சேர்ந்த பண்டத்தை நடுவில் சிறிது துணை கொள்ள எதனையும் தொடர்ந்து சாப்பிட முடியும்.

இப்படிப் பல முறைகளில் முக்கியத்துவம் வாய்ந்த உப்பை அறவே நீக்கும் போது, மற்ற சுவைகள் அதிகமுள்ள பொருள்களை அதிக அளவில் உண்பது கெடுதலே, மிகக் குறைந்த அளவில் தித்திப்பு மட்டும் சேர்த்துச் சாப்பிடலாம். அதிக அளவில் தித்திப்பு சேர்ந்தால் 2- 3 வேளைகளிலேயே உணவில் வெறுப்பு தோன்றும். உப்பின்றி உதவாத கிழங்கும் முற்றிய கறிகாய்களும் பருப்பும் காரமும் புளிப்பும் சேர்ந்த பண்டத்தை உப்பின்றி வேகவேத்தோ பொரித்தோ வறுத்தோ சாப்பிட அவை எளிதில் ஜீர்ணமாகாது. உப்பை நிறுத்தியதன் நோக்கம் நுண்ணிய குழாய்களில் ஏற்பட்ட விஷ அடைப்பு நீக்குவதே. உப்பின்றி இவற்றைச் சாப்பிடுவதால் அந்த அடைப்பு அதிகமாகும். அதனால் உப்பில்லாப் பத்தியத்தின் நோக்கமும் நிறைவேறாது.

**உப்பின்றி இருக்க முடியாதாயின்** - உப்பு சேராமல் ஓரிரு நாட்கள் கூடத் தள்ள முடியாதெனில் என்ன செய்வது ? (1) இந்துப்பு சேர்த்துச் சாப்பிடலாம். அதுவும் குறைந்த அளவில். உப்பும் இந்துப்பும் கைப்பில் ஒரே சீரானவை. கடல் உப்பில் கசிவு அதிகம். பாறை உப்பான இந்துப்பில் கசிவு மிகக் குறைவு. துணைச்சுவையாகத் தித்திப்பும் கொண்டதானதால் நெஞ்சில்

எரிவு குறையும். தாதுக்களை நீர்க்கச் செய்யாது. ஆனால் கலப்படமில்லாத நல்ல இந்துப்பு கிடைப்பது அரிது. அந்தப் பாறைகள் ஸிந்து நதிக்கரையில் (பாகிஸ்தானில்) கிடைப்பவை. மங்கனீஸ் போன்ற மற்ற தாதுக்கலவை இதில் குறைவு. அதனாலும் இதன் உபயோகம் ஆரோக்கிய நிலையிலும் சிறந்ததே.

(2) உப்பை அறவே நீக்க இய லாத நிலையிலும், இந்துப்பு கிடைக்காத நிலையிலும் உப்பை வறுத்துச் சேர்ப்பது உண்டு. மண் சட்டியில் இளஞ்சூட்டில் உப்பை வறுத்துக் கொள்ள அதில் இனிப்பு கூடும். கசிவும் நீர்க்கச் செய்யும் தன்மையும் கைப்பு ம் குறையும்.

**உப்பில்லாத பத்தியம் - வாரம் ஓரிரு வேளைகள் -** இன்றையச் சூழ்நிலையில் வாரத்தில், ஓரிரு வேளைகளாவது உப்பை அறவே நீக்குவதும், பொதுவாக உப்பை வறுத்து உபயோகிப்பதும் நல்லது. அதற்கான காரணங்கள் :-

1. அதிக மகசூல் பெறும் எண்ணத்துடன் உணவுப் பயிர் அனைத்திற்கும் செயற்கை உரம் போடுவது இன்று தவிர்க்க முடியாததாகி விட்டது. செழிப்பாக வளர்ந்தாலும் அவ்வுணவுப் பொருள்கள் ருசி குன்றியுள்ளன. அதனால் உப்பு, புளி காரம் போன்ற துணைப் பொருள்களின் சேர்க்கை அதிகம் தேவைப்படுகிறது. அளவிற்கு மீறி இவற்றின் உபயோகத்தினால் விளையும் எரிவு, உணர்ச்சியடக்கமின்மை, தளர்ச்சி முதலியவை நீங்க வாரத்தில் ஓரிரு வேளைகளாவது உப்பை நீக்கியோ இரவில் உணவில் உப்பைக் குறைத்தோ உணவுப் பழக்கத்தை அமைத்துக் கொள்வது சிறந்தது.

2. கடலோரங்களில் உள்ள உப்பளங்களில் சூழ்நிலைப் பாதிப்பால் உணவாக ஏற்கத் தக்க உப்பைத் தருபவை சில உப்பளங்களே. முன்பு உணவாகப் பயன்படுத்தத்தக்க உப்பின் விநியோகத்தில் கட்டுப் பாடிருந்தது. சில உப்பளங்களில் விளையும் உப்பு மனித ஆரோக்கியத்திற்கு உகந்தது அல்ல என அவற்றைத் தோல் பதனிடுவது போன்றவற்றில் மட்டும் செலவிட அனுமதி வழங்கப்பட்டு வந்தது. சட்ட திட்டங்களைக் கண்காணிக்கும் நிலை சீரில்லாத இந்நாட்களில், மணத்தையோ சுவையையோ கொண்டு பொதுமக்கள தாமே தர நிர்ணயம் செய்ய முடியாத நிலையில், கிடைக்கும் உப்பை வறுத்துப் பயன்படுத்துவதும் அறவே சில வேளைகளிலாவது தவிர்ப்பதும்

*உடல் நலனுக்கும் நல்லது.*

*3. இன்று பெரும்பாலானவருக்கும் தோலில் அரிப்பும் கசிவும், எரிவும் கருமையும் தரும் தோல் நோய்கள் அதிகம் காணப்பெறுகின்றன. கப - பித்த தோஷங்களால் ஏற்படுபவை இவை. இவற்றுக்கான பல காரணங்களில் சில (1) முன் சொன்னவாறு ருசி கூட்ட உப்பு, புளி காரம் அதிகம் சேர்ப்பது (2) செயற்கை உரங்களின் அதிகச் சேர்க்கை (3) எண்ணெய் வகைகளில் ஏற்படும் கலப்படம் (4) பழக்கமே இல்லாத உணவுப் பொருள்களைச் சேர்ப்பது (5) விஷசக்தி மிக்க மருந்துகளின் அதிக உபயோகம் இவை ஆகும். இவை ரத்த நீரில் அழற்சி தரும் மாறுதல்களை ஏற்படுத்துகின்றன. இவை வராமல் தடுக்கவும், வந்தபின் நோய்கள் கடுமையடையாமல் தடுக்கவும் உப்பைக் குறைக்கவும். அதன் விளைவாக புளி, காரம் குறைவதும் உதவுகிறது. உப்பைக் குறைப்பதால் சிறுநீரின் தடிப்பு குறைந்து சிறுநீர் நன்கு வெளியாகும். அதன் மூலம் உடலில் சேர்ந்துள்ள விஷச்சத்துக்கள் எளிதில் வெளியாகும். உடல் தெளியும்.*

## புளியில்லாத பத்தியம்

புளிப்பால் ஏற்படும் நன்மை : *தமிழனின் உணவில் புளிக்கும் புளிப்பிற்கும் அதிக இடம் உண்டு. தமிழனின் முக்கிய உணவாகிய அரிசி, துவரை, உளுந்து முதலியவற்றைச் செரிக்கப் புளி உதவுகிறது. எலுமிச்சம்பழம், நார்த்தை, கொறுக்காப்புளி முதலியவை இதன் பக்கத் துணைகள், ருசி ஜீர்ணசக்தி, ஊட்டம், மனவலிவு, மனத்தெளிவு, பொறிகளின் கூர்மை, எதனையையும் தாங்கும் உறம், குடலில் வாயுவும் மலமும் தேங்காமல் வழிப்படுத்துதல், நீர்க்கசிவை அதிகப்படுத்தி உணவை வாய் முதல் பெருங்குடல் வரை நெகிழ்ந்த நிலையில் தள்ளி விடுதல், உணவின் இறுக்கத்தைத் தளர்த்திக் கூழாக்குதல் இவை புளிப்புச் சுவையின் உடலுக்கு இதமான செயல்கள்.*

புளிப்பால் ஏற்படும் கேடுகள் : *(1) அதிக அளவிலும் முறையற்றும் புளிப்பை உபயோகிக்க ஜீர்ணத்திரவம் கடுங்காரமாகியோ முறிந்தோ இரைப்பையில் தாபத்தையும் வேக்காளத்தையும் அதிகப்படுத்தும், நெஞ்சில் எரிவு, வயிற்றில் புண், உணவேற்கச் சிறிது தாமதமாயினும் கடுமையான வேதனை, வலி, புளித்து எதுக்களித்தல், நாக்கின் அடியில் புண்*

வாந்தி முதலியவை இரைப்பையை நிலைக்களனாகக் கொண்டு தோன்றும் நோய் நிலைகள், புளிப்பைக் குறைப்பதால் இத்தகைய நிலைகள் மாறுகின்றன.

(2) இந்த முறிந்த அதிகப் பித்தம் தோலை நிலைக்களனாகக் கொண்டு வரும் நோய் நிலைகள்- அழற்சி, தசைகளின் அழற்சி, தோலில் எரிவு, எரிப்பு, கொப்புளம், கசிவுநீர் பட்ட இடத்தில் நோய் பரவுதல், தடிப்பு, சீதம் பரவுதல் முதலியவை. இவற்றிலும் உணவில் புளிப்புக் குறைவதால் அழற்சி எரிவு முதலியவை குறைகின்றன.

(3) வீக்கம், அடி, தீப்புண், எலும்பு முறிவு, சிறுநீரில் எரிவுடன் சீழ், சிறுநீரில் விஷாணுக்கள், சிறுநீரகத்தில் புண், இவற்றிலும் அழற்சி மிக்க சூழ்நிலையிலும் புளிப்பைக் குறைக்க நன்மை ஏற்படுகிறது.

இந்நிலைகளில் புளி, எலுமிச்சம்பழம், புளித்த மோர் தக்காளி முதலியதனைத்தையும் தவிர்க்க வேண்டியதே.

புளிப்பை அறவே நீக்க முடியாதவர்களுக்கு - புளிப்பின்றி உணவேற்க முடியாதவர் சிலர். புளிப்பை அறவே நீக்க வேண்டாத நோய் நிலைகள் சில. இவற்றில் புளிப்பைக் குறைத்துக் கொள்ள சில வழி முறைகள் (1) புளிப்பை நீக்கிச் சமைத்த உணவில் உணவேற்கும் போது தேவையாயின் 10 - 15 சொட்டு எலுமிச்சம்பழச்சாறு சேர்த்துச் சாப்பிடுவது (1) புளித்த மோரைக் காய்ச்சித் தயாரித்த மோர்க்குழம்பு முதலியவற்றை ஏற்பது (3) புளியை சுட்டு உபயோகிப்பது - மோரின் புளிப்பு காய்ச்சுவதால் மென்மை அடைகிறது. வேக்காளம் எரிவு ஏற்படுத்தாது.

புளியைச் சுட்டுச் சேர்த்தாலும் பழகிய புளி சேர்த்தாலும் அழற்சி குறையும். இயற்கையாக எந்தக் காயும் காயாக இருக்கும் நிலையில் அதிகம் புளிக்கும். பழுக்கும் போது தானாக அதில் தித்திப்புத் தோன்றும். ஆனால் புளி பழுத்தாலும் புளிக்கும். அதற்காகப் பழுத்த புளியைப் பானையில் அல்லது பீங்கான் ஜாடியில் வைத்திருந்து 6 - 7 மாதங்கள் கழித்து உபயோகிப்பர். அந்தப் பழைய புளி கடுங்காரம் போலில்லாமல் மென்மையை அடைந்து விடும். அந்தப் பழுத்த - நாட்கள் சென்ற - பழகிய புளியையும் உபயோகிக்கும் முன்பு ஓரிரு நாட்கள் வெயிலில் உலர்த்தி எடுக்கப் புளிப்புமாறித் தித்திப்புபடரும். அதனையும் அனலில் வாட்டிச் சுட்டபின் பயன்படுத்தப் புளிப்பு

மென்மையடைந்து இதமானதாக இருக்கும். இப்படிப் புளியை பக்குவப்படுத்தி உபயோகிக்கப் புளிப்பில் ஏற்படும் கேடுகள் குறையும். பத்தியத்திற்காக இப்படிப் புளிைப் பதப்படுத்துவதுண்டு.

வெகு நாட்கள் புளியே சேர்க்காமல் கடுமையான பத்திய நிலேயிலிருந்து பிறகு புளியைச் சேர்த்துக் கொள்ளும் நிலே வந்ததும் புளியைச் சேர்க்கத் தொடங்கும் போது இப்படிப் பக்குவப்படுத்தப்பட்ட சுட்ட புளியைச் சில நாட்கள் பழக்கிப் பின் சாதாரண புளியைச் சேர்ப்பர்.

உப்பைத் தவிர்க்க வேண்டிய நிலேகள், அனைத்திலும் புளி சேராதிருப்பதுதான் நலம். உப்பின்றி புளி மட்டும், தித்திப்பின்றி புளி மட்டும். கசப்பின்றி புளி மட்டும் சேர்ப்பது நல்லதல்ல.

வாயுப்பண்டம் நீக்கிய பத்தியம்.

வயிற்றில் வாயுவை அதிகப்படுத்தி உப்புசம்,விரைப்பு, அடைப்பு ஏற்படுத்துபவை சில. இவை பெரும்பாலும் இரைப்பையில் நெகிழ்ந்து பக்குவப்படத் தாமதமாகும். குடலில் செல்லும் போது சுற்றியுள்ள நீரைத் தன்பால் இழுத்து உப்பிக் கெட்டியாகித் தடையாகிக் கீழ் மேல் - வாயு நகராமல் செய்யும். இவைகளை வாயுப்பண்டம் - வாயு பதார்த்தம் என்பர். கிழங்கு மாப்பண்டங்கள், முற்றிய வாழைக்காய் அவரை கொத்தவரை பூசனி பரங்கி முதலிய காய்கறிகள் பருப்பு மசாலேப் பொருள் மிக்க உணவு இவை இதனுள் அடங்கும். சிலருக்குச் சிலவற்றால் வாயு அதிகமாகும். இது தேகவாகைப் பொறுத்தது. ஜீர்ணசக்தி குறைந்த நிலேகளிலும், உடலில் எந்த இடத்திலாவது, வலி, பிடிப்பு, தசை இறுக்கம், குழாய் அடைப்பு, கடுப்பு முதலியவை அதிகமாயிருக்கும் போதும் இதனைத் தவிர்க்கச் செய்வர்.

**வாயுப்பண்டங்களால் அதிகப்படும் வாயுவின் தன்மை :** ஜீர்ணத்தின் இரண்டாவது மூன்றாவது நிலேகளில் சிறுகுடல் பகுதியில் இந்த வாயுப்பண்டங்கள் செல்லும் போது இவைகளை ஜீர்ணிக்க உதவும் ஜீர்ணத் திரவங்கள் போதிய அளவில் சுரக்காமலோ அல்லது அளவு சீராக இருந்தாலும் சக்தி குன்றியோ இருந்தால் இவை ஜீர்ணமாகத் தாமதமாகும். அதற்குள் குடலில் அதிக நேர தாமதத்தால் அவற்றில் கொதகொதப்பு (க்லேதம் அழுகலின் முன் நிலே) ஏற்பட்டு விடும். இதன் விளைவாக நுரைத்துக் கொப்புளங்களாகவும் நேரிடையாக வாயுவாகவும்

உப்பிவிடும், சுற்றிலும் உள்ள அடைப்பால் அது தடைபட்டு உள்ளழுத்தம் அதிகப்படுகின்றது. சிறுகுடலில் எப்போதும் இயற்கையாக உள்ள வாயுவின் அழுத்த அளவு அதனால் அதிகப்படுகிறது. சுற்றிலுமுள்ள ஜீர்ணிக்கத் தாமதமான கனத்த உணவால் தடைபடுவதால் வாயு அதிகமாவதை உணர்கிறோம்.

இந்த வாயு அழுத்தம் அளவிற்கு மேலாகி இரைப்பையையும் மஹாபிராசீர தசை (டயாஃபரம்)யையும் அழுத்தும் போது இதயத்திலும் சுவாசப்பையிலும் இந்த அழுத்தம் ப்ரதிபலிக்கிறது. இதயப்பகுதியில் வலி. மூச்சுத்திணறல் முதலியவை இதன் விளைவுகள். வாயுவின் அழுத்தம் தசைகளிலும் நரம்பு மண்டலங்களிலும் பரவும் போது கடுப்பு வலி, தசைகளில் இறுக்கம். பூட்டுகளில் பிடிப்பு, வீக்கம் இவை தொடரும். வாயுப் பண்டங்களைக் குறைப்பதால் வாயுவின் அழுத்தம் குறைகிறது. வேதனை தானே குறைகிறது.

குடலில் குமையும் வாயுவின் அழுத்தம் தோள் பட்டையிலும் இடுப்பிலும் விலாவிலும் தசைகளை இறுக்கி வலியை உண்டாக்கும். குடல் வாயுவிற்கும் இவைகளுக்கும் உள்ள தொடர்பைப் பலர் அறிவர். யானைக்கால் வீக்கத்தால் பாதிப்புறும் பலர் கொத்தவரங்காய் சாப்பிட்டேன், குளிர் ஜ்வரம் வந்தது : உருளைக்கிழங்கு சாப்பிட்டேன், ஜ்வரம் வந்தது என்பர். இப்படி வாயுவின் ஸஞ்சாரத்தின் தடை ஒரு மூலையிலும் அதன் பின் விளைவு மற்றொரு மூலையிலுமாக உணரப்படும். இது எளிதில் வாயு உபத்திரவங்களால் பாதிப்புறும் தேகவாகுள்ளவர்களிடம் அதிகம் காணப்படும்.

### கரப்பான் பண்டம் நீக்கிய பத்தியம்

ரத்தத்திலும் தசைகளிலும் அழற்சியையும், எரிவையும், கசிவு மிகுதியையும் ஏற்படுத்துபவை கரப்பான் பண்டங்கள், புளி நீக்கி உண்பது, புளியைப் பக்குவப்படுத்தி உண்பது கரப்பான் நோய்களில் முக்கியமான பத்தியம். கசிவு மிகுந்த நிலைகளில் சில நாட்களாவது உப்பையும் நீக்குவது நல்லது. சில முக்கியக் கரப்பான் பண்டங்கள் - இட்லி தோசை (உளுந்தாலானது) கத்திரிக்காய், கரணைக்கிழங்கு, வெங்காயம், மொச்சைக் கொட்டை, முட்டைக்கோஸ், கீரை, தக்காளி, நல்லெண்ணெய், மாங்காய், புதிய அரிசி, புளித்த தயிர், மீன், புளிப்பும் உப்பும் மிக்க உணவு, புளிப்பும் எண்ணெய்யும் மிக்க பிசைந்த அன்ன

வகைகள் இவை கரப்பான் பண்டங்கள். இவைகளை நீக்குவதும் முடிந்தவரை குறைப்பதும கரப்பான் தோல் நோய் நிலைகளில் ஏற்றது.

சேர்க்கையால் கேடு விளைவிப்பவை சில. இவையும் கரப்பான் பண்டங்களாகும். இவைகளைத் தனித்து ஏற்கும் போது இவை மிகவும் நல்லவை. கூட்டு சேரும் போதும் அந்த கூட்டுப் பொருளைத் தொடர்ந்து உபயோகிக்கும் போதும் இவை உடலின் நோய் எதிர்ப்பு சக்தியைக் குறைக்கின்றன அலர்ஜி போன்ற நிலைகள் எளிதில் ஏற்படத்தக்க உடல் தளர்ச்சியை ஏற்படுத்துகின்றன. இவை விருத்தான்னங்கள் - தனித்து நல்லவையாயினும் கூட்டு சேரும் போது உடலைக் கெடுப்பவை - என ஆயுர்வேதம் இவற்றைத் தனித்துக்கூறும். இந்த விருந்தான்னங்களும் (விருத்தம் - கூட்டுப் பாருளாக முரண்பட்டது). ஏதேனும் ஓரிரு வேளைகள் உபயோகிப்பதால் கேடு விளையாது. தொடர்ந்து உபயோகிக்கும் போது அவை கெடுதல் தரும். அவை பின்வருமாறு.

*(1) வாழைப்பழமும் தயிரும் (2) வாழைப்பழமும் மோரும், (3) புளிப்புள்ள பழங்களும் பாலும் (3) புளிப்பு மிக்க உணவும் அதனைத் தொடர்ந்து பால் சாப்பிடுதலும் (5) இட்டிலி போன்ற புளித்த மாவாலான பண்டங்களும் பாலும் 6) பாலும் மீனும் (7) கொள்ளு வரகு, தினை, உளுந்து அவரை இவற்றில் ஒன்றுடன் பால் (8) பச்சை முள்ளங்கி (வேகாதது)யும் பாலும் (9) தயிரும் கோழிக்கறியும் (10) முள்ளங்கியும் உளுந்தும் (11) மிளகும் மணத்தக்காளியும் (12) வெல்லம் அல்லது தேனுடன் மணத்தக்காளி (13) வெண்கலப்பாத்திரத்தின் 10 நாட்களுக்கு மேலிருந்த நெய் (14) சூடான உணவுடன் தயிர் (15) சூடான உணவுடன் தேன் (16) தேனும் நெய்யும் சம அளவில் (17) தேனும் நல்லெண்ணெய்யும், (18) பசளைக் கீரையும் எள்ளுப் பொடியும், என்றொரு நீண்ட பட்டியலைத் தருகிறது விருந்தான்னவர்க்கம் என்ற பகுதி.*

குஷ்டம் போன்ற தோல் நோய்கள் வரக் காரணங்களைப் பற்றிய குறிப்பு ஒவ்வாத உணவு பானங்கள் विरोधीन्यन्नपानानि என்று தொடங்குகிறது. உடன் பாதிப்பு உண்டாக்காததால் இந்தச் சேர்க்கை உணவும் பானமும் கொள்வது பற்றிச் சிந்திக்கத் தவறி விடுவோம். கொடும் நோய் வந்த பின்னும் இவைகளுக்குப்

நோய்களுக்கும் உள்ள தொடர்பு பற்றி அறியோம். காரிய காரண விளக்கங்களுக்கப்பாற்பட்டவை இவை. மஞ்சள் நிறமுள்ளதும் வெண்ணிறமுள்ளதும் சேர வெண் மஞ்சள் நிறமுள்ள பொருள் தோன்றும். சுண்ணாம்பும் மஞ்சள் பொடியும் சேர செந்நிறமுள்ள கலவை தோன்றும். இது கூட்டுப் பொருளின் விசேஷத்தன்மை. இதில் சட்டென மாறுபாடு தெரிவதால் கூட்டால் விளைந்ததெனக் கண்டு கொள்கிறோம். வெளிப்படையாகத் தெரியாதவற்றில் இனம் காண்பது நீண்ட நாளைய அனுபம் ஒன்றால்தான் இயலும். ஆயுர்வேதம் அத்தகைய நீண்டகால அனுபவத்தின் அடிப்படையில் அமைந்த மருத்துவம். அதன் ஆராய்ச்சியில் இந்த சேர்க்கை தோஷங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

பத்தியம் என்பது உணவு மட்டுமல்ல, நடைமுறையும் இதனுள் அடங்கும் என முன் கூறியுள்ளோம். கரப்பான் நிலையை ஏற்படுத்தக் கூடிய சில நடைமுறைகளைக் குறிப்பிடுவோம்.

கடும் வெயிலில் அலைந்து வந்ததும் இயற்கையாகச் சூடு தணியாதிருக்கையில் உடன் சில்லென்று குளிர்ந்த நீரில் முகம் கழுவுவதும், குளிப்பதும், குளிர்ந்த நீரைப் பருகுவதும், கடும் உடல் உழைப்பிற்குப் பின் ஓய்வெடுக்காமல உடன் குளிப்பது, பேதி ஆவதற்கோ வாந்தி எடுப்பதற்கோ மருந்து சாப்பிட்டபின், அதனால் பேதியாகவோ வாந்தியாகவா மலம் வெளியேறிக் கொண்டிருக்கையில் திடீரென அதனைத் தடைசெய்வது முதலியவை இதனுள் அடங்கும். இவை கரப்பான் நோயைத் தோற்றுவிக்கும். நோய் முன்னர் வந்திருந்தால் அதனைப் பரப்பும்.

புளிப்பும் மப்பும் மிகுந்த நிலையில் அதனை வெளியேற்ற இயற்கை வாந்தி எனும் முறையைக் கையாளும். வாந்தியால் விஷமித்தது வெளியேறி விட்டதும் உடல்நிலை சீராகும். இயற்கை தான் செய்து கொள்ளும் சீரமைப்பு இது. இப்படி வரும் வாந்தியை நோயென நினைத்து அதனை நிறுத்த முற்பட்டால் இரைப்பையில் விஷமித்து வெளியேறத்தை எதிர் பார்த்துக் கிளம்பிவிட்ட உணவின் கலவை மருந்தால் அடங்கிவிடும். அதன் விஷச்சத்து உடல் முழுவதும் பரவிக் கரப்பானை ஏற்படுத்தும். விஷமித்த நிலையில் முறைப்படி வாந்தியை அனுமதிப்பதும் விஷமிக்காதபடி உணவைக் கட்டுப்படுத்துவதும் பத்தியம்.

இச்சாபத்தியம் :

குறிப்பிட்டதொரு தனித்த பத்தியமுறையின் தேவையின்றி இருக்கக்கூடிய நிலைகளில் கூட ஆரோக்கியத்திற்காக ஏற்கும் மருந்துகளோ, கடுமையற்ற நோய் நிலையில் தொடர்ந்து பல நாட்கள் ஏற்க வேண்டிய மருந்துகளோ சாப்பிடும் போது இச்சா பத்தியமாக இரு என்பார்கள். இந்த இச்சாபத்தியம் மருந்துகள் விரைவில் பலன் தர உதவும். ஆரோக்கிய நிலையை நன்கு பாதுகாக்கும். இந்த முறை எக்காலத்திற்கும் எந்த நிலைக்கும் உகந்ததே. இதனையே வாழ்நாள் முழுவதும் பின்பற்றி நோயுற்று வலிவுடன் வாழ்பவரைக் காணலாம்.

எண்ணெய்க்குளி நாள், நோய் நீங்கித் தலைக்குக் குளிக்கத் தொடங்கும் நாள். பல நாட்கள் இடைவெளியின்றி வெளியூர் பிரயாணம் செய்த களைப்பால் வீட்டில் தங்கி ஓய்வெடுக்கும் நாள் முதலிய நேரங்களில் கூட இதனைப் பயன்படுத்துவது மிகவும் நல்லது.

**இச்சாபத்திய முறையில் தவிர்க்கத் தக்கவை :** கறிகாய் வகைகளில் பாகற்காய், முற்றிய மாங்காய், கொத்தவரங்காய் முற்றிய பூசனி அகத்திக்கீரை, கடுகு, எள், நல்லெண்ணய், கடலை, பலாப்பழம் முற்றி இறுகிய வாழைப்பழம், பெருங்காயம், பூண்டு, சோம்பு வகை முதலியவை. மற்றும் புகையிலை கள்ளு வகை முதலிய உணர்ச்சி தூண்டுபவை, கோழி, பன்றி, நண்டு, மீன் கடமான் முதலிய புலாலினங்கள். இவை உடலின் இயக்கத்தின் சீரைத் தாமதிக்கவோ மாறுபடவோ செய்பவை. வீர்யம் குறைந்த மருந்துகள், சாதாரணமாகக் கடுமையற்ற நோய் நிலையில் பயன்படுத்தப்பெறும் மருந்துகள் இவற்றின் வீர்யத்தைக் குறைத்து மருந்து உடலில் பரவுவதைத் தடுக்கும் அல்லது தாமதிக்கச் செய்யும். மிக்க வீர்யமுள்ள மருந்துகள் உபயோகப்படும் நிலைகளிலோ மருந்தின் கடுமையினை வழிமாறச் செய்து வேறு துன்பமளிக்கும் பின் விளைவுகளை ஏற்படுத்தும். வயிற்றுப்புண், தோலில் சினப்பு, சொறி முதலியவை ஏற்பட இந்த உணவு பதார்த்தங்கள் காரணமாகலாம்.

**இச்சாபத்தியமாக ஏற்கத் தக்கவை :** அவரைப் பிஞ்சு, முருங்கைப் பிஞ்சு, தூதுளங்காய், மணத்தக்காளி வற்றல், சுண்டைவற்றல், பொன்னாங்கண்ணி, சிறுகீரை, கறிவேப்பிலை,

துவரை, வயல்பயறு, சிறுபயறு, மிளகு, ஜீரகம் வெந்தயம், கிராம்பு, லவங்கப்பட்டை, ஏலம் ஜாதிக்காய், சர்க்கரை, பசுநெய் இவை பொதுவாக பத்திய வகையைச் சேர்ந்தவை. எளிதில் கரப்பானுக்கு - தோல் எரிவு அரிப்பு கசிவு நோய் நிலைக்கு ஆட்படுபவர் கூட தினவை ஏற்படுத்தும் கத்திரிக்காய் முதலிய வற்றைப் பிஞ்சாக உபயோகப்படுத்தினால் துன்பமிராது.

கத்திரிப்பிஞ்சு, பீர்க்கம் பிஞ்சு, புடலம் பிஞ்சு, அவரைப் பிஞ்சு இவைகளைப் பாசிப்பருப்புடன் புளியின்றி பொரித்த கூட்டாகத் தயாரித்து மாவடு. நெல்லிக்காய், கசப்பு நார்த்தை இவற்றாலான எண்ணெய் காரம் குறைந்த ஊறுகாயுடன் உணவை ஏற்பது ஒரு பத்திய முறை. மண் சட்டியில் உப்பை வறுத்துக் கொட்டி அதே சட்டியில் மோரைவிட்டுக் காய்ச்சி முறித்த மோர். ஓமம், ஜீரகம் இவற்றைத் தாளித்துச் சூட்டுடன் கொட்டிய மோர், நன்கு கடைந்து சூட்டுடன் உள்ள மோர், இஞ்சி கருவேப்பிலை போட்டுக் காய்ச்சிய மோர் இவை மோர் சேர்க்கக்கூடாத நோய் நிலைகளில் கூட ஏற்றது. பெருங்காயத்தை அப்படியே சேர்க்காமல் பொரித்துச் சேர்ப்பதும் அதன் கெடுதிக்கு முறிவே. புளியைச் சுட்டுச் சேர்ப்பதும் அத்தகையதே.

மிளகு, மஞ்சள், ஜீரகம் பெருங்காயம், சுக்கு, ஏலம் வெந்தயம் இவை **திரிதோஷ சம** திரவியங்கள் என்பர். காரமாக ரஸகந்தகச் சேர்க்கையுள்ள மருந்துகளைப் பயன்படுத்தும் போதும் மஞ்சளை நீக்குவர். மஞ்சள் ரஸத்தின் வீர்யத்தை முறித்து வேகத்தைக் குறைத்துவிடும். மற்ற நிலைகளில் மிளகு முதலியவற்றைச் சேர்த்து உணவு தயாரிக்கப் பத்திய உணவாகும்.

**ஆண் - பெண் உணவு:** குழந்தைப் பிராயத்தில் உணவில் வேற்றுமை தேவை இல்லை. முதிர்ச்சி ஏற்படும் போது இயல்பால் சில தனித்த சூழ்நிலைகளை அவர்கள் எதிர்பார்க்க நேரிடுகிறது. மாதவிடாய், பிள்ளைப்பேறு, பாலூட்டல் பலரது மனப்பான்மைகளுக்கு ஈடுகொடுத்துக் குடும்பத்தில் நிறைவும் அமைதியும் ஏற்படுத்தும் பொறுப்பு இவற்றால் இவர்கள் உடல் கொழுத்து உருண்டு திரண்டு வலிவுள்ளதாக அமைவது அவசியம். ஆண்களைப் போன்று முரட்டுத் தொழிலோ, அலைச்சலோ, தேக உழைப்போ இல்லாமையால் உணவை அதிக அளவில் ஏற்கத் தேவை இல்லை. லகுவானதும் வலிவையும் கொழுமையும் தரக்கூடியவை. மென்மையும் தோலின் வழவழப்பையும் பாதுகாப்பவை. மனத்தில் கொந்தளிப்பும்

தடுமாறுதலும் ஏற்படுத்தாதவை என்ற முறையில் உணவு அமைதல் நலம். அதிக அளவில் உணவும் மிகுந்த கொழுமை தருவதும் உடலில் ஊளைச்சதையையும், தளர்ச்சியையும் தரக்கூடும். "உண்டி சுருங்குதல் பெண்டிற் கழகு" லகுவான உணவு, அளவில் குறைந்த் உணவு சத்து மிக்கதென்ற ரீதியில் அமைவது நலம்.

முரட்டுத் தொழில், அலேச்சல், நெருக்கடி, உடல் உறவில் உத்வேகம் இவற்றை அதிகம் எதிர்பார்க்கக்கூடிய ஆணிற்கு உணவு அதிக அளவிலும், வலிவும் கனமும் ஊட்டமும் தருவதாகவும் அமைவது நலம்.

வயது : வயதிற்கேற்பவும் உணவை அமைத்துக் கொள்ள வேண்டும். சிறு குழந்தைப் பருவத்தில் வளர்ச்சி அதிகம். தேய்வு குறைவு. இதனை ஈடுசெய்ய கபமும் கசிவும் கொழுமையும் மிக்க உடல் திசுக்கள் அதிகம் வளரும். சீரணக் கருவிகள் எந்த நிலையையும் சமாளிக்கும் திடம் பெற்றிராது. மென்று தின்ன உதவும் பற்களும் முழு முதிர்ச்சி பெருத நிலே. சத்து நிறைந்ததும் மென்மையானதுமான . உணவே இந்நிலேயில் அதிகம் ஏற்றது. பசியை மந்திக்கச் செய்யும் பொருள் ஏற்றதல்ல. தாய்ப்பால் இளங்கன்றுள்ள பசுவின் பால், பாலும் சோறும், என்றவாறு உணவின் தரத்தைக் கிரமமாக அதிகப்படுத்துவது நல்லது.

குழந்தை வளர வளர, எளிதில் ஜீர்ணமாகக் கூடியது, வயிற்றில் வாயுத்தடை, நெஞ்சிலும் தலேயிலும் கபத்தடை, குடலில் மலத்தடை ஏற்படாதவாறு பாதைகளைச் சுறுசுறுப்படையச் செய்யும் உணவு தேவை. தயிர் முற்றிய கறிகாய் மாப்பண்டங்கள் இவை பொதுவாக ஏற்றவை அல்ல. நல்ல ஜீர்ணசக்தியும் நல்ல பசியும் சுறுசுறுப்புமுள்ள குழந்தைகளாயின், புளிக்காத தயிரை ஜீரகம் ஓமம் பெருங்காயம் இவற்றைத் தாளித்துச் சேர்த்துத் தரலாம். மாப்பண்டங்களில் எண்ணெய் சேராததும், அதிகம் புளிக்காததுமான இட்டிலி, இடியாப்பம் முதலியவற்றை மிகக் குறைந்த அளவில் தரலாம். எண்ணெயின்றி மேல் மூடிஆவியில் வெந்த தோசை நல்லதே. எண்ணெய் அதிகம் சேர்த்து வதக்கிய கறிகாய்கலாளான வியஞ்சனங்கள் ஜீர்ணவலிவுள்ள குழந்தைகளுக்கு அளவில் குறைத்துத் தரலாம். இனிப்பு மிக்கதும், காரமும் உப்பும் குறைந்ததும் புளிப்பும் கசப்பும் மிகக் குறைந்ததுமான உணவு

இப்பருவத்தில் ஏற்றது. முன் உண்டது ஜீர்ணமானதை ஒட்டி 3 -4 வேளைகளாக உணவைப் பகிர்ந்தளிக்கலாம்.

வயது முதிர, முதிர, உணவில் கனம், நெய்ப்பு கொழுமை, வெம்மை, புஷ்டி சுறுசுறுப்பு தரக்கூடிய அறுசுவை உண்டி ஏற்றது. காலை நடுப்பகல் இரவு என்று மூன்று நேரங்களில் ஒரே சீராக உணவை அமைத்துக் கொள்ளுதல் நலம். வாரத்தில் இரு நாட்களிலாவது இரு பொழுதாவது துவர்ப்பும் கசப்பும் மிக்க கறிகாய் முதலியவற்றாலானதைச் சாப்பிடுவது, கறிகாய்கள், கனமான பொருள் இவற்றை அறவே குறைத்து மிக லேசான உணவை உண்பது, ஓரிருவேளை உபவாஸம் இருப்பது இவைகளை இருபது வயதிலிருந்தே பழகிக் கொள்வது வாழ்வை எந்நிலையிலும் ஏற்கும் மனத்திட்பத்தையும் உடல் திடத்தையும் ஏற்படுத்தவல்ல உணவுப் பழக்கமாகும்.

முதுமை நெருங்கும் பருவத்திலிருந்தே உணவைக் கட்டுப்படுத்துவது அவசியம். இனி மந்தப்பொருளும் கனத்த பொருளும் ஜீர்ணமாகாது. ஜீர்ணமானாலும் உள்ளே சேராது. மலப்பொருளாக அதிகம் வெளியேறும். உடலைக் கனக்கச் செய்யும். வயிற்றில் காற்று மலம் இவற்றின் அசைவைத் தடைசெய்யும். முன்போல் உடல் உழைக்க மறுப்பதால் உழைப்பு குறையும். உழைப்பின்மையால் உணவின் அளவு அதிகமாகத் தேவை இராது. நாப்பழக்கமும் சபலமும் காரணமாக அதிகம் உண்டால் உடல் கனத்து முதுமை நோய்கள் எளிதில் ஏற்படக் காரணமாகும். அதனால் லகுவான, வாயுத்தடை செய்யாத, அதிகச் சத்தற்ற உணவை ஏற்பது நல்லது. உபவாசம், கசப்பு துவர்ப்பு மிக்க பொருளைக் கொண்ட வியஞ்சனங்கள் மனச் சபலத்தைக் குறைக்கும்.

**தேக உழைப்பு :** உடலை மிகவும் வறுத்தி உழைப்பவர்களுக்குப் பசியும் தாகமும் அதிகம். அளவில் கடின உணவுதான் அவர்களுக்கு ஏற்றது. அவர்கள் எளிதில் ஜீர்ணமாகும் லேசான உணவை ஏற்றால் பசித்தீயின் கடுமையால் உடலின் சேமிப்பும் எரிந்து தளர்ச்சியுறுவர். உடற் பயிற்சி செய்வோரும் கடின உணவை ஏற்பர். பயிற்சிக்குப் பின் அவர்கள் நீரில் ஊறவைத்த கடலை உளுந்து முதலியவற்றை உண்பதும் எருமைப்பாலைச் சாப்பிடுவதும் தசைகளை வலிவடையச் செய்கின்றன.

உழைப்பு மிகக் குறைந்தவர்கள் கடின உணவை ஏற்றுக் கொண்டால் அஜீர்ணம், வயிற்றில் உளைச்சல் முதலியவை ஏற்பட்டு உடல் தளர்ந்து விடுகிறது. கல்வித்துறை ஆராய்ச்சித் துறையில் ஈடுபட்டவர்களுக்கு லேசான உணவே அதிகம் நல்லது. கூர்மை, ஸூக்ஷ்மமான கவனிப்பு, தொடர்ந்த மன உழைப்பிற்கான உறுதி, ஒரே நோக்குடன் கவனத்தில் தீவிரம் இவைகளைத் தரும் பால், நெய் வல்லாரைக் கீரை, மணத்தக்காளி, பசளே, மாதுளே, இஞ்சி மிளகு இவை ஏற்றவை.

காலைப் பொழுதில் ஏற்ற உணவுப் பண்டங்கள் : பயறு, கடலே, துவரை, உளுந்து, காராமணி, எள்ளு, மொச்சை முதலிய பருப்பு வகையும் கடுகு, மிளகு, சுக்கு, பெருங்காயம் முதலிய ஜீர்ண உதவிகளும்.

பகல் பொழுதில் ஏற்றவை : கிழங்குகள், பழ வகைகள், மசாலே காரம் மிக்க உணவுப் பொருள்கள், எருமைத்தயிர், கீரை முதலிய தாமதித்துச் செரிக்கும் உணவுப் பொருள்கள். இவைகளால் ஏற்படும் வயிற்று மந்தம் வெயிலின் சூட்டாலும் உழைப்பாலும் பாதிக்காது.

இரவில் நல்லவை : அவரைப் பிஞ்சு, அத்திக்காய், பசுவின் பால் கடைந்த மோர், முருங்கைப் பிஞ்சு, துவரம் பருப்பு, தூதுளங்காய், மணித்தக்காளி வற்றல் முதலியவை. நல்ல தூக்கம் தூங்கி எழுந்ததும் களைப்பின்றி உற்சாகமும் தருமளவிற்கு லேசான உணவை நெஞ்செரிவு எதுக்களிப்பு ஏற்படாத வகையில் அளவில் உண்பது அவசியம்.

இதுபோல் தேசத்தையும் கார் கோடை, மழை, பனி ஆகிய பருவங்களையும் கணித்து உணவை அமைத்துக் கொள்ளுதல் அவசியம். அவரவர்க்கு அவரவரது தனித்த தேகவாகு காரணமாகச் சில எளிதில் செரிக்கும் ; சில எளிதில் செரிக்காது. இதை அவரவர்களே உணர முடியும். கூரிய நோக்குடன் இவற்றைக் கவனித்து ஒதுக்க வேண்டியவற்றை ஒதுக்கிச் சேர்க்க வேண்டியதைச் சேர்த்து உணவுப் பட்டியலே அவரவர் அமைத்துக் கொள்ளலாம்.

தேகவாகுக்கேற்ப உணவுப் பொருளை அமைத்துக் கொள்ளுதலும் பத்திய முறையாகும்.

வாயு தேகவாகுள்ளவர்க்குப் பொதுவாக உடலில் வரட்சி அதிகம். நெய்ப்பு தேவைப்படுவது. தோலில் சொரசொரப்பு

மென்மை இன்மை இவை காணும். உடல் மெலிவு, தூக்கக் குறைவு அமைதியின்மை. பசி, சிலசமயம் நேராக இருப்பதும் சிலசமயம் அதிகப் பசியும் சிலசமயம் பசியின்மையும் என்றவாறு சீரின்மை முதலியவை இயல்பு, இவர்களுக்கு உரைப்பு, துவர்ப்பு கசப்பு சுவை மிக்கவை மேலும் வரட்சி முதலியவற்றை அதிகப்படுத்தும். அதனால் அபத்தியம்.

மிளகு, மிளகாய், அத்திப்பிஞ்சி சுண்டைவற்றல், பாகற்காய் முதலியவை மிகக் குறைந்த அளவில் சேர்க்கலாம். அதிக அளவில் இவை அபத்தியம். முளைக்கீரை, முருங்கைக் கீரை, மணத்தக்காளிக் கீரை பொன்னாங்கண்ணிக் கீரை, கோவை, தூதுளை, வல்லாரை, பண்ணைக் கீரை மிதிபாகல்பிஞ்சு, அவரைப் பிஞ்சு காராக்கருணை, சுண்டைவற்றல் வெண்டை, தூதுவளைவற்றல், மணித் தக்காளி வற்றல், ஆதண்டைவற்றல் இவை ஏற்றவை. உப்பிட்ட ஊறுகாய்களில் நார்த்தை, இஞ்சி களா முதலியவற்றால் ஆனவை. இந்துப்பு இவை ஏற்றவை.

பொதுவாய் இனிப்பு புளிப்பு, உப்பு சுவையுள்ளவை ஏற்றவை. பால், நெய், தயிர், வெண்ணெய் இனிப்பு மாதுளை வாழைப்பழம், மாம்பழம், திராக்ஷை, அரிசி, கோதுமை, உளுந்து இவை உணவிற்கு ஏற்றவை. உடலுக்கு நெய்ப்பு தருபவை மிகவும் ஹிதம். அதிகத் தேகப்பயிற்சியும் இரவில் கண் விழித்த லும் அதக உடலுறவும் அபத்தியம். புலாலுணவு முட்டை, மீன் முதலியவற்றாலான உணவு நெய்ப்புள்ளதாயின் நல்லது. வரட்சி - காரம் மிக்கது ஏற்றதல்ல.

பித்த தேகவாகுள்ளவர்களுக்கு : சூடும் எரிவும் இயல்பில் இவர்களிடம் அதிகம் காணும். உணவு ஜீர்ணமாகும் நிலையில் எளிதில் புளித்து நெஞ்செரிவு அதிகமாகும். காரமும் சூடும் இவர்களுக்கு ஏற்காது. துவர்ப்பும், கசப்பும் இனிப்பும் மிக்க உணவு அதிகம் நல்லது.

உப்பும் புளிப்பும் மிகவும் மிதமாயிருந்தால் நலம். நெல்லிக்காய், சர்க்கரை அல்லது வெல்லம் சேர்ந்த புளித்த பழச்சாறுகள், கசப்பும் துவர்ப்பும் புளிப்பும் மிக்க நார்த்தை மாதுளை முதலிய கனிகள், வெயிலில் உலர்த்தி நன்கு பழுத்த பழம்புளி இவை ஏற்றவை. கருப்பஞ்சாறு, சர்க்கரை கலந்து இனிக்கும் கடைந்த மோர் இவை ஏற்றவை. நெய் வெண்ணெய், இனிக்கும் தயிர், புளிக்காத இனிக்கும் பழங்கள். நல்லவை.

முருங்கைக் கீரை, மணித்தக்காளி, பொன்னாங்கண்ணி, புளியாரை கீரை, கோவை, தூதுளை, வல்லாரை, சிறுகீரை, பண்ணைக் கீரை, சக்கரவர்த்திக் கீரை, பூசணிக்காய், பரங்கிக்காய் கத்திரி, முருங்கைக்காய், மெதுபாகல், கொம்புப்பாகல், வெள்ளரிப்பிஞ்சு, புடல், பீர்க்கு, அவரை வாழைக்கச்சல், சர்க்கரைவள்ளி, வெங்காயம் களா, வாழைத்தண்டு, வாழைப்பூ, சுண்டை, மணித்தக்காளி முதலிய வற்றல்கள், நாரத்தை மாவடு மிளகு இஞ்சி எலுமிச்சை முதலியவற்றால் ஆன ஊறுகாய்கள் நல்லவை.

கப தேகவாகுள்ளவனுக்கு இயல்பாக உடலில் நெய்ப்பும் கசிவும் அதிகம் இருக்கும். மந்தமும் கனமும் வழவழப்பும் அதிகம். காரம். துவர்ப்பு, கசப்பு மிக்க உணவு ஏற்றது. இனிப்பு புளிப்பு உப்பு மிக்கவைகளைக் குறைத்துக் கொள்ளுதல் நலம். நெய் வெண்ணெய், ஆடைத்தயிர், இனிப்பு மிக்கவை இவற்றைக் குறைத்தல் நல்லது. பகல் தூக்கம், அதிகம் ஓய்வு, மென்மையான இருக்கையில் அதிக நேரம் உட்கார்தல் முதலியவை அபத்தியம். தூக்கத்தின் அளவைக் குறைத்துத் தேகப்பயிற்சியும் சுறுசுறுப்பாக எல்லாச் செயல்களிலும் அதிகம் ஈடுபடுதலும் வழிநடையும் நல்லவை. கேழ்வரகு, கம்பு, சோளம், வரகு, கொள்ளு முதலிய புஞ்சை தானியங்களாலான உணவு, யவையின் அன்னம் இவை அதிக அளவிலும் அரிசி, கோதுமை முதலிய நஞ்சைத் தானியங்களாலானதும் பருப்பு வகைகள் மிக்கதும் குறைந்த அளவிலும் சேர்ப்பது நல்லது.

அகத்திக்கீரை, கொத்துமல்லி, வெந்தயக்கீரை மணத்தக்காளிக்கீரை, பொன்னாங்கண்ணிக்கீரை, பசலைக் கீரை, புளியாரை, வல்லாரை, பண்ணைக்கீரை, பூசணிப்பிஞ்சு, கத்திரிப்பிஞ்சு, பாகல் வெள்ளரி, அவரை, சுரை, பலாமுசு, காராக்கரணை, முள்ளங்கி, வெங்காயம், களா, வாழைத்தண்டு வாழைப்பூ, வாழைக்கச்சல், வற்றல் வகை மிளகு இஞ்சி இவற்றாலானான ஊறுகாய்கள் ஏற்றவை.

நோய் நிலைகளில் பத்தியமானவையும் அபத்தியமானவையும் நோய்களைப்பற்றிய விளக்கங்களும் அறியத் தக்கவை.

ஆயுர்வேத நூல்கள் எழுதிய ஆசார்யர்களில் சரகர் மிகச்சிறந்தவர். அவர் தமது சீடர்களுடன் சுற்றாத காடுகள் கிடையாது. எப்போதும் ஸஞ்சாரத்திலேயே இருந்ததால் சரகர்

என்ற பெயர் ஏற்பட்டது. அந்தந்த நாட்டின் சீதோஷ்ண நிலை மனிதர்களின் தேகவாகு, உணவு நடைப் பழக்கங்கள் இவை ஒவ்வொன்றையும் சீடர்களுக்கு அறிமுகப்படுத்தி விஷயங்களைத் தெளிவுபடுத்தும் அவரது போதனை முறையே தனிப்பட்டது. ஆரோக்கியத்திற்கு எப்போதும் நன்மை அளிக்கக் கூடியவை சில. எப்போதும் கெடுதி விளைவிப்பவை சில. இவ்விரண்டு பிரிவுகளில் சிறந்தவற்றைத் தம் நூலில் சுருக்கமாகக் கொடுக்கிறார்.

**இதமானவற்றில் சிறந்தவை**

| | |
|---|---|
| உயிர் வாழ்வதற்கு உதவுபவைகளில் | உணவு |
| களைப்பு நீக்குபவைகளில் | நல்ல குடிநீர் |
| தாதுக்களுக்கு உயிர் ஊட்டுபவைகளில் | பால் |
| உடல் பருக்க வைப்பவைகளில் | புலால் |
| உணவுக்கு ருசி தருவதில் | உப்பு |
| உணவை ஏற்க மனதிற்கு விருப்பமூட்டுவதில் | புளிப்பு |
| உடலைத் திடப்படுத்துபவைகளில் | தேகப்பயிற்சி |
| இயற்கையான தூக்கம் தருபவைகளில் | எருமைப்பால் |
| வயது முதிராமல் யௌவனத்தைக் காப்பவைகளில் | நெல்லிக்காய் |
| பத்தியப் பொருள்களில் | கடுக்காய் |
| ரஸாயனங்களில் | நெய் |
| குடல் பலவீனம், மூலம் வீக்கம் முதலியவைகளில் | மோர் முக்கிய உணவாகக் கொள்ளுதல் |
| பற்களுக்கு பலமும் ருசியுமளிப்பவைகளில் | எண்ணெய்விட்டுக் கொப்பளித்தல் |
| ஆரோக்கியமளிப்பவைகளில் | உரிய காலத்தில் உணவு உண்பது |
| ஆயுளை வளர்ப்பவைகளில் | பிரும்மசர்யம் |
| நோயாளியின் குணங்களில் | வைத்யர் சொன்னபடி செய்வது |
| ஆண்மையை வளர்ப்பவைகளில் | மன உறுதி |
| சிரமத்தைப் போக்குபவைகளில் | ஸ்நானம் |
| உற்சாகமளிப்பவைகளில் | மனச்சந்தோஷம் |
| புஷ்டியளிப்பவைகளில் | ஓய்வு |
| தூக்கமளிப்பவைகளில் | உடல் புஷ்டி |

பலமளிப்பவைகளில் அறுசுவை உண்டி
கர்ப்பம் நிலைக்கச் செய்பவைகளில் அன்பு
வாழ்க்கை மேம்படப்பயன்படும் சாதனங்களில்நல்ல கல்வித்துணை கொண்ட பகுத்தறிவு
புத்தியை வளர்ப்பவைகளில் கற்றோருடன் கூடிப்பேசல்
ஸுகமளிப்பவைகளில் பற்றின்மை
வாழ்க்கை வளம்படப் பயன்படும் விஞ்ஞானங்களில ஆயுர்வேதம

**ஆரோக்கியத்தைக் கெடுப்பவைகளில் சிறந்தவை**

நோய் வரவழைப்பவற்றில் மல மூத்திர வேகங்களை அடக்குதல்
அஜீர்ணக் கோளாறு உண்டாக்குபவைகளில் கனத்த உணவு
அஜீர்ண நோய் ஏற்படுத்துபவைகளில் அளவுக்கு மீறி உண்பது
ஆயுளை குறைப்பவைகளில் பட்டினி
உடலை இளைக்கச் செய்பவைகளில் காலம் கடந்து உண்பது
குடலை கெடுப்பவைகளில் முன் உணவு ஜீர்ணமாகாத போது உண்பது
கெட்ட நோய்களை ஏற்படுத்துபவைகளில் முரண்பட்ட குணமுள்ள உணவை ஒருங்கே உண்பது
அபத்தியங்களில் சக்திக்குமீறி உடலைக் களைக்கச் செய்வது
ஆண்மையைக் குறைப்பவைகளில மனக்குறை படுதல்
பிராண சக்தியைக் குறைப்பவைகளில் தன் சக்திக்கு மீறிய சாகசச்செயல்கள் ச்

நோயை வளர்ப்பவைகளில் கவலை
உடலை வாடச் செய்பவைகளில் சோகம்
சோம்பலை வளர்ப்பவைகளில் அதிகத் தூக்கம்
கிலேசமளிப்பவைகளில் நாக்கு அடக்கமின்மை
பயமூட்டுபவைகளில் திறமையின்மை
காலம் கடத்திக் காரியத்தைக் கெடுப்பவைகளில் முயற்சியின்மை
பலவீனம் தருபவைகளில் ஒரு சுவை உண்டி
நோய் கட்டுக்கு மீறச் செய்பவைகளில் வைத்யன் சொன்னபடி கேட்காமை

ஆரோக்கிய வாழ்வு என்றும் நிலைக்கட்டும் !

இறைவன் அருள் புரிவானாக !

## ஸ்ரீ S.V. ராதாகிருஷ்ண சாஸ்த்ரி எழுதி வெளியிட்டுள்ள நூல்கள்

### ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

*தமிழுரை - இரண்டாம் பதிப்பு - 503 பக்கங்கள். எளிய நடையில் ஸ்ரீ சங்கர பகவத் பாதரின் பாஷ்யம், ஸ்ரீ பராசரபட்டரின் பகவத் குணதர்பணம், ஸ்ரீ ஸத்ய ஸந்தயதீசரின் உரை இவற்றையொட்டிய விளக்கம். பாமரரும் பண்டிதரும் ஒருங்கே விரும்பிப் படித்து பயன் பெறுவதற்கேற்ற நூல் ரூ. 120/-.*

**நலமிக்க வாழ்க்கை முறை** :- *பல நூற்றாண்டுகளாகத் தமிழ்நாட்டில் நடைமுறையிலிருந்த வாழ்க்கை முறை - ஆயுர்வேதம் தந்துள்ள நோயற்ற வாழ்க்கை முறைக்கான உபதேசங்களை ஒட்டி நோயின்றி உடல் - மன நலத்துடன் வாழ்வதற்கான நடைமுறைகளை எளிய நடையில் விளக்கும் நூல். எளிதில் தயாரித்து அன்றாடம் பயன்படுத்தி நலம் காணும் மூலிகைகளாலான ஸாதனங்கள். விழித்தெழுவது முதல் தூங்கச் செல்லும் வரை கடைபிடிக்கத்தக்கது.* 250 பக்கம். விலை ரூ. 48/-. கிடைக்குமிடம் **S.V. ராதாகிருஷ்ணசாஸ்திரி, 22, வீரேச்வரம் அப்ரோச் ரோடு, ஸ்ரீரங்கம், திருச்சி–620 006.**

### ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

*ஸ்ரீ பாஸ்கரராயர் என்ற மகான் இயற்றிய ஸௌபாக்ய பாஸ்கரம் என்ற உரையை ஒட்டியும் மற்றும் பல சாக்த நூல்களின் கோட்பாடுகளுடனும் உள்ள விரிவுரை. மூன்றும் பதிப்பு. விரிவாக்கம் பெற்றது. 650 பக்கங்கள். சலுகை விலை ரூ. 100. வெளியிட்டவர் - பத்மபூஷண ராமஸ்வாமி ஐயர் சாரீடீஸ் ஸொஸைடி, ஸீதாலக்ஷ்மி ராமஸ்வாமி கல்லூரி வளாகம், திருச்சிராப்பள்ளி-620002.*

### ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்சரி 4 பாகங்கள்

*வேதம் புராணம் ஆகமம் முதலிய நூல்களிலிருந்து திரட்டிய நூறுக்கும் மேற்பட்ட ஸ்தோத்திரங்கள். விநாயகரைப் பற்றிய 64 ஸம்ஸ்க்ருத கீதங்கள். மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம் - பாஸ்கரராயரின் பாஷ்யம், தமிழுரையுடன், ககாராதி ஸஹஸ்ரநாமம். பன்னிரண்டு அஷ்டோத்தர சத நாமாவளிகள், இருதிரிசதிகள். உச்சிஷ்ட கணபதியின் மூன்று ஸஹஸ்ரநாமங்கள், அஷ்டோத்தர சதநாம ஸ்தோத்திரங்கள், சிறிதும் பெரிதுமான விநாயக தத்வம் விளக்குகிற 70 துதிகள் ஔவையார் நக்கீரர் முதலிய பக்தர்கள் இயற்றிய அகவல் முதலிய நூல்கள், பூஜை, ஸபர்யா விதி, மந்திரக் கிரமங்கள் ஹோம விதிகள் முதலிய உபாஸநா மார்க்கத்திற்கான விளக்கங்கள் அடங்கியது. 4 பாகங்களும் ரூ. 600/-.* வெளியிடுபவர் : **ஸ்ரீ விக்நேச்வர** வேங்கடேசுவரா டிரஸ்ட் 283, டி.டி.கே. சாலை, சென்னை-6000018.